# ஆறுபடைவீடமைந்த

## ஸ்ரீ மத் பாம்பன் சுவாமிகள் மடாலயம்

சிதம்பரம்.



# குடமுழுக்கு விழா மலர்

20 - 08 - 1993

உ

ஓம் குமரகுருவே சரணமையா

சிதம்பரம்

ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள் மடாலயம்



ஆறுபடைவீடு

# குடமுழுக்கு விழா மலர்

20-8-93 வெள்ளிக்கிழமை

உ

குருவே சரணம்




வேதக் கலையும் சித்தாந்த
    மேன்மைக் கலையும் நன்குணர்ந்து
பேதக் கலைகள் தகர்த்தெறிந்த
    பேரானந்தப் பெரு வாழ்வே
நாதத் தமிழில் குகமேன்மை
    நாட்டி நிறுத்தும்சிவகுருவே
பாதத் துணைகள் எனக்கருள்வாய்
    பாம்பன் குமர குருமணியே!

உ

ஸ்ரீ சந்த்ரமௌளீச்வராய நம:

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு

# ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள்

# ஸ்ரீமடம் ஸம்ஸ்தானம்

## காஞ்சிபுரம்

## ஆசியுரை

ஞானஸ்வரூபியான குமரன் குன்றுதோறாடும் குணமுடையவன். இவனது ப்ரபாவம் வெகுவாக வெளிப்படுமிடங்கள் அறுபடைவீடுகள் என அழைக்கப்படுகின்றன.

இங்குள்ள மூர்த்தங்களையெல்லாம் ஒரே இடத்தில் தரிசித்துப் பயனடையும் வகையில் சிதம்பரம் ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள் மடாலயத்தில் இம் மூர்த்தங்களை, பிரதிஷ்டை செய்து 20-8-93 இல் கும்பாபிஷேகம் நடத்தவிருப்பது அறிந்து மகிழ்கிறோம்.

இது தொடர்பாக வெளியிடப்படவிருக்கும் மலர் கந்தனது கருணைத்தேன் பொழியும் நன்மலராகத் திகழவும், கும்பாபிஷேக நிகழ்ச்சிகள் நிர்விக்னமாக நிறைவேறவும் சிவகுமரன் அருள் கிட்ட ஆசீர்வதிக்கிறோம்.

நாராயணஸ்ம்ருதி.

ஓம் முருகா



## வாழ்த்துப்பா

### நேரிசை வெண்பா

பண்ணார் சிதம்பரத்தில் பாம்பன் சுவாமிமடம்
திண்ணார் முருகன் திருவருளால் — விண்ணார்
புகழும் பெருமையுடன் பூதலத்தில் ஓங்கி
தகவுடனே வாழ்க தழைத்து

அன்புள்ள
**கிருபானந்த வாரியார்**

உ

ஓம் குமரகுருவே சரணமய்யா

ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள் திருவடிகளே சரணம்

# பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள்

## வாழ்க்கை வரலாறு

தமிழ் நாட்டில் சென்ற நூற்றாண்டில் அவதரித்துத் தன்னிகரற்று விளங்கியவர் வைதீக சைவ சித்தாந்த ஞான பானு பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள் ஆவார்கள். சைவ சமய நெறியாகிய குக நெறிக்கும் தெய்வ மொழியாகிய தமிழ் மொழிக்கும் என்றும் வற்றாத வளமாகப் பெரும் ஒளியை ஊட்டி அவர் அருளிய 6666 பாடல்களாலும் இளம்பூரணனாகிய ஆறுமுகச் சிவனின் தத்துவத்தையும், மேன்மையையும் தெளிவுற உலகிற்குக் காட்டியுள்ளார்கள். தத்துவ உலகமும் தமிழ் உலகமும் அவரால் உலகளாவிய உயர்ந்த நிலையை அடைந்த உண்மை என்பது மறுக்க முடியாததாகும்.

இராமநாதபுரம் மாவட்டம் பாம்பன் எனப்படும் சீர்மிகு சிற்றூரில் சிவாலயப் பணி செய்து வாழ்க்கை நடத்தி வந்த சாத்தப்பப்பிள்ளை செங்கமலம் அம்மாள் இவர்களுக்குக் கி.பி. 1850-52ல் இராமேஸ்வரத்தில் அவதரித்தவரே நம் பாம்பன் சுவாமிகள். பெற்றோர்கள் தம் குழந்தைக்குச் செவ்வேள் பரமனின் திருப்பெயராகிய "அப்பாவு" எனும் பெயரைச் சூட்டி மகிழ்ந்தார்கள். சுவாமிகள் தம் இளமைக் கல்வியை முனியாண்டிப் பிள்ளையைக் குருவாக ஏற்றுத்துவங்கி, உயர் கல்வியையும் கற்றுச் சிறந்து விளங்கினார்கள், சிலகாரணங்களால் அவரது

கல்வி தடை பெற்றது. ஆனால் இறையருளால் அவரது ஆன்மீக வாழ்க்கை சீரும் சிறப்புமாக வளர்ந்து வந்தது.

ஒருநாள் அதிகாலையில் அப்பாவு தென்னந்தோப்பு கண்டுவர விரும்பிச் சென்றார்கள். முதலாவதாக இருந்த தோப்பில் தம் தந்தையார் இருப்பதைக் கண்டதும் தோப்பு வாயிலின் அருகே நின்று வானத்தை நோக்கினார். கீழ்வானத்தில் இளஞ்சூரியன் செவ்வேட் பரமனின் பேரொளியைப் பரப்பிக் கொண்டு எழுவதைக் கண்டதும் அவரது உள்ளம் உவகை அடைந்தது. தமது கையில் வைத்துக் கொண்டிருந்த சஷ்டி கவசம் எனும் நூலைப் பார்த்ததும் சஷ்டிபதியாகிய சண்முக நாதனைத் தாமும் செந்தமிழ்ப் பாடல்கள் இயற்றிப் பாடித் துதிக்க வேண்டும் என்ற ஓர் எண்ணம் உதயமாயிற்று. கீழே இருந்த பனை ஓலையைத் தமது எழுத்தாணியால் சரி செய்து கொண்டு முருகனை வேண்டினார். குகப் பிரம்மனே உன்னைப் பாடும் பணியை எனக் கருள்க. நான் ஒவ்வொரு பதிகத்தையும் அருணகிரிநாதப் பெருமானை வைத்தே முடிப்பேனாக. அவரது வாக்குத்திறம் எனக்கும் வருமாறு அருள் புரிய வேண்டும் என மனமுருகி முருகப் பெருமானிடம் வேண்டினார். இறைவனருளால் அவரை அறியாமலேயே அவரது வாய் வழியே "கங்கையைச் சடையிற் பரித்து" எனும் அருள் வாக்கு வெளிப்படுவதாயிற்று. "ஆதியே அமரர் கோவே" என முடிந்து முதல் பாடல் பனையோலையில் நிறைவு பெற்றது ஒருமுறை அதே இடத்தில் உரக்கப் படித்து விட்டு இறைவா! பாடலை ஏற்றருள வேண்டுமென வேண்டினார் இதன் பிறகு நாள்தோறும் ஒரு பாடலை, இயற்றி நூறு நாட்களில் நூறு பாடல்களைத் தொகுத்தார்: இது நடைபெற்ற பொழுது சுவாமிக்கு சுமார் பதின்மூன்று வயதிருக்கலாம். இப்பாடல்களின் தெய்வப் புலமையை அறிந்த முருகபக்தர் சேதுமாதவஐயர் அவர்கள் கவிஞ

ராகிய சுவாமிகளைத் தம் இல்லத்திற்கு அழைத்து மங்கள் கரமான விஜயதசமி நன்னாளில் இளங் காலைப் பொழுதில் 'திருவாறெழுத்து' மந்திரத்தை உபதேசம் செய்தார்கள்.

தினந்தோறும் தியானம் செய்து வரும் பொழுது ஒரு நாள் கந்தக் கடவுள் கவிஞரின் கனவில் தோன்றி ஓர் இடத்திற்கு அழைத்துச் சென்று பாற்சோறு பிசைந்து உண்ணும்படி கூறினார்கள். தானும் உடனிருந்து உண்டார்கள். இக் கனவு நிகழ்ச்சிக்குப் பிறகு பாடும் திறனும், பல மொழி நூல்களைப் பற்றிய அறிவாற்றலும் அனைவரும் வியக்கும் வண்ணம் உயர்ந்து வளர்ந்து விளங்கியது.

சுவாமிகளின் அருள்ஞான வாழ்க்கையில் பொற்கால மாக விளங்கிய காலம் பிரப்பன் வலசை என்ற ஊரில் செய்த கடுமையான தவமே ஆகும். இக்காலம் சுவாமிகளுக்கு சுமார் 40 முதல் 41 வயது இருந்திருக்கும் குமரகுரு குமரகுரு எனக்கூறியவாறே மயானத்தில் வெட்டப்பட்ட சதுரக்குழிக்குள் பல இன்னல்களுக்கு இடையே கடுந்தவம் மேற்கொண்டார் தவம் துவங்கிய முப்பத்தைந்தாம் நாள் முருகப்பெருமான் அகத்தியர், அருணகிரிநாத சுவாமிகளுடன் காட்சி தந்தார்கள் சுவாமிகள் பெரும் மகிழ்ச்சி அடைந்து, குழியிலிருந்து வெளிவந்து மும்முறை வலம் வந்து நிலத்தில் விழுந்து வணங்கினார்கள் இது நிகழ்ந்த காலம் 20—04—1894 சித்ரா பௌர்ணமி தினமாகும்.

கி.பி. 1895ல் சுவாமிகள் துறவறம் மேற்கொண்டு சென்னை சென்று அருள்நெறி வாழ்க்கையை உபதேசித்து வந்தார்கள். சுமார் ஓராண்டிற்குப் பிறகு சிதம்பரத்திற்கு அருகில் நாலு கிலோமீட்டரில் அமைந்துள்ள குமரவன் பேட்டையில் தங்கி தகராலய ரகசியம், பரிபூரணானந்த போதம், கந்தரொலியலந்தாதி, குகப்பிரம அருட்பத்து,

திருப்பா எனும் நூல்களைக் கி.பி. 1896 ல் இயற்றினார்கள். நம் சுவாமிகள் தில்லை நடராசப் பெருமானைத் தரிசித்து விட்டு இப்பொழுது சிதம்பரத்தில் ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள் மடாலயம் நிறுவப் பெற்றுள்ள குளக்கரையில் அமர்ந்து ஆழ்ந்த சிந்தனையில் அரிய நூல்கள் இயற்றியுள்ளார்கள். சுவாமிகள் கால்பட்ட அருள்ஞான பூமியில் மடாலயம் உள்ளது. கி.பி. 1891 ல் இயற்றிய சண்முக கவசம், பஞ்சாமிர்த வண்ணம் என்னும் பாடல்களும், கி.பி. 1918 ல் இயற்றிய குமாரஸ்தவம் எனும் மகாமந்திரமும் இன்று மக்களால் தினம் பாராயணம் செய்து பயன் பெற்று வரும் நூல்களாகும்.

சென்னையில் திருவான்மியூரில் மயூரபுரம் எனும் திருக்கோயிலில் நம் சுவாமிகள் அருள் நிலை அடைந்து அனைவர்க்கும் அருள்புரிந்து வருகிறார்கள்.

சுப்ரமண்யோம்.



## ஸ்ரீமத் குமர குருதாச குருப்யோ நமஃ

ஸ்ரீமத் குமர குருதாச சுவாமிகளது அருட்சீடர் சிதம்பரம் **கவி. கு. நயினாசாமி** அவர்களின் வாழ்க்கைக் குறிப்பு

தில்லை நடராஜப் பெருமான் எழுந்தருளியுள்ள புண்ணியத்தலமான சிதம்பரத்தில் திரு குமாரசாமி நாடார் அவர்களுக்கும் திருமதி முத்தாட்சி அம்மையார் அவர்களுக்கும் கி.பி 1901ம் ஆண்டு மே மாதம் 7 ந்தேதி அன்று அருள்நிறைச் செல்வனாக கவி. கு நயினாசாமி அவர்கள் பிறந்தார்கள். அவர் சிறுவயதிலேயே சிலம்பம், மல்யுத்தம் போன்றவற்றில் சிறந்து விளங்கினார்கள்.

அவர் தமது பதினேழாவது வயதில் அவரது சகோதரருடன் ஏற்பட்ட மனவருத்தம் காரணமாக, மனதில் கசப்பு ஏற்பட்டு வேதனையால் துறவறம் மேற்கொண்டுவிடலாம் என்று எண்ணினார். மேலும் தலையை மழித்துக் கொண்டு புவனகிரியைச் சார்ந்த உயர்திரு குமரகுருதாச பிள்ளையவர்களைச் சந்தித்தார். பாம்பன் சுவாமிகளின் சீடரான பிள்ளையவர்கள் சென்னை நம்புலய்யர் தெருவில் வசித்துவரும் தமது குருவான ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகளிடம் சென்று ஆசீர்வாதம் பெற்றுக் கொண்டு ஆவன செய் என்றார். அதுபோலவே நயினாசாமி அவர்கள் தில்லைக் காளியம்மன் கோயில் தீட்சிதர் ஒருவரிடம் பணம் பெற்றுக் கொண்டு சென்னைக்கு பயணமானார்

ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள் எப்போதும் சரியாக பகல் பதினோரு மணிக்கு மட்டுமே உணவு உண்பார்கள். அந்த ஒரு நேர உணவிலும், உப்பு, காரம், புளி நீக்கப்பட்டிருக்கும். ஐந்து நிமிடம் தாமதமானாலும் உணவு ஏற்கமாட்டார். திரும்ப அடுத்த நாள் பகல் பதினோரு மணிக்குத்தான்

உணவுபற்றிச் சிந்திப்பார்கள் ஆகையால் நம்புலய்யர் தெருவில் சுவாமிகள் தங்கியிருந்த மாடிப்பகுதியின் கிழ்ப்பகுதியில் தங்கியிருந்த உயர்திரு ஜெகநாத முதலியார் அவர்கள் சுவாமிகளைக் காணவரும் அன்பர்களைப் பத்தேமுக்கால் மணிக்குள் பார்த்துக் கிளம்பும்படி ஒரு காவலாளியை நியமித்துச் சொல்லவைத்தார்.

ஒரு நாள் சுவாமிகள் காவலரிடம் தன்னைக் காண மொட்டையடித்துக் கொண்டு ஒரு அன்பர் வருவார். அவர் சிதம்பரம் எனும் ஊரிலிருந்து வருகிறேன் என்றால் மேலே வரச் சொல் எனக் கட்டளையிட்டார்கள். அதுபோலவே சென்னை சென்ற கவி.கு நயினாசாமி அவர்கள் காவலரிடம் போய் நிற்க, காவலரும் ''ஐயா!'' தாங்கள் சிதம்பரமா?' என்று கேட்டார். நயினாசாமி அவர்களுக்கு ஒன்றும் புரியவில்லை. நான் வருவது சுவாமிகளுக்கு முன்பே மனதில் உதயமாகியதோ என எண்ணி வியந்து. ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகளைக் கண்டு பரவசமடைகிறார். சுவாமிகளிடம் தான் சந்நியாசம் பெறுவதைப் பற்றியும், காவி உடை வாங்குவது பற்றியும் நயினாசாமிகள் கூற, சுவாமிகள் சிரித்தவண்ணம் கேட்டுக் கொண்டிருந்தார். பிறகு தமக்கு பணிவிடை செய்யும் பாலம்மையார் மூலம் "இந்த நயினாசாமிக்கு உணவு இடு'' என்றார்கள். உணவு பரிமாறிய அம்மையார் நயினாசாமிகளை நோக்கி "இதுவரை யாருக்கும் கிடைக்காத பாக்கியம் உனக்குக் கிடைத்திருக்கிறது. சுவாமிகள் எவருக்கும் உணவிடுமாறு நேரிடையாகக் கூறியது கிடையாது'' என்றார். அதுகேட்க நயினா சாமிகள் கண்களில் கண்ணீர் மல்க உணவருந்தினார்கள். சில நாட்கள் மடத்திலேயே தங்கி சுவாமியை தரிசித்தும், பணிவிடை செய்தும் வந்தார்கள்.

ஒரு நாள் சுவாமிகள் சாப்பிட்ட எச்சில் இலையில் தானும் அமர்ந்து மீதமுள்ளதை நயினாசாமிகள் சாப்பிட்

டார்கள். அதுமுதல் தம் மனதில் இருந்துவந்த துறவற எண்ணம் மாறிவருவதை அறிந்தார்கள். சில நாட்களில் சுவாமிகள் நயினாசாமிகளை அழைத்து 'ஊருக்குச் செல், எல்லாம் கிட்டும்'' எனக் கூறி அருளினார்கள். சுவாமிகளின் வாக்குப்படி நம் சொந்த ஊரான சிதம்பரம் வந்தடைந்தார் சிதம்பரத்தில் காளி. என் ரத்தினம் நாடக சபாவின் நிறுவனரை சந்திக்கும் நயினாசாமிகள் பாடல்கள், எழுதியும், பாடியும், நடிக்கவும் செய்தார்கள். இதில் வரும் வருமானம் மூலம் குடும்பமும் நடைபெற்றுவந்தது சமயம் கிடைக்கும்போதெல்லாம் நயினாசாமிகள் சென்னை சென்று பாம்பன் சுவாமிகளை நேரில் தரிசித்தும், பணி விடைகள் செய்தும் வந்தார். (1918 முதல் 1929 வரை)

அதன் பிறகு நயினாசாமிகள் வில்லுப்பாட்டுக்கள் மூலமாகவும், நாடகங்கள் ரீதியாகவும் ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகளின் நாமங்களைப் பாடிவருவதையே கடமையாகக் கொண்டார். இதன்மூலமாக, சன்மானமாக சுவாமிகள் உபயோகித்த திருநீற்றுப் பை ஒன்றையும், பாதுகைகளையும், உத்திராட்சக் கண்டிகை ஒன்றையும் பெற்றது சிறப்பிலும் சிறப்பு. மேற்கூறிய ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள் உபயோகித்த பொருட்கள் அனைத்தும் சிதம்பரம் சபாநாயகர் தெரு, ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள் மடாலயத்தில் இன்றும் பாதுகாக்கப்பட்டு வருகிறது.

நயினாசாமி அவர்களின் அருட்தொண்டால் ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள் மடாலயம் சிதம்பரத்தில் நிறுவப்பட்டு பல சிறப்புகளைத் தாங்கி விளங்கி வருகின்றது. அந்த மடாலயத்தில் 1935ம் ஆண்டு முதல் சுவாமிகளின், திருவுருவ விக்ரகத்தையும், திருவுருவப் படத்தையும் வைத்துப் பூஜித்து வருகிறார்கள். இப்போது ஆறுபடைவீடு அமைப்பும் இங்கு அமைந்துள்ளது.

1981ம் வருடம் நயினாசாமி அவர்களை 'குமாரஸ்தவம்' இராமானுஜம் சுவாமிகள் சந்திக்கும் பாக்கியம் கிட்டியது. இந்தச் சந்திப்பில் நயினாசாமி அவர்களின் வாரிசான உயர்திரு கு.ந. பசுபதி அவர்களும் உடனிருந்தார். உயர்திரு டி.வி. ஆனந்தன் அவர்களால் மடாலயம் அடிக்கல் நாட்டப்பட்டு 1982ம் வருடம் கட்டித் திருப்பணி முடிந்து, கும்பாபிஷேக விழாவும் சிறப்பாக நடைபெற்றது.

இது தொடக்கம் 'குமாரஸ்தவம்' இராமானுஜம் சுவாமிகளும், கவி.கு நயினாசாமிகளும் மிகுந்த நட்புடன் உறவுடன் சந்தித்தும், அருட்பணி பல செய்தும் வந்தார்கள். 1985ம் வருடத்திலிருந்து நயினாசாமிகளுக்கு உடல் நிலை சீராக இல்லாததால் உயர்திரு கு.ந. பசுபதி பி ஏ அவர்கள் மடாலயத்தின் நிர்வாகப் பொறுப்பை ஏற்று இன்றுவரை சிறப்பாக நடத்தி வருகின்றார்.

1989ம் வருடம் கார்த்திகை மாதம் ஏகாதசி திதியில் நயினாசாமி அவர்கள் இறைவன் திருவுளப்படி ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகளின் திருவடியைச் சேர்ந்தார். அன்னாரது ஜீவ சமாதி சிதம்பரம் ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள் மடாலயத்தின் ஒரு பகுதியில் வைக்கப்பட்டு, சிறப்பான முறையில் பூஜிக்கப்பட்டு வருகின்றது.

சிதம்பரம் தில்லை நடராஜர் ஆலயத்தின் தெற்கு புறத்தில், சீர்காழி சாலையில் உள்ள, ஆய்குளத்தின் தென்கரையிலுள்ள பாம்பன் சுவாமிகள் மடாலயம், பல சிறப்புகளைத் தன்னுள்ளே அடக்கி, அடியவர்கள் அல்லலையும், பிரச்சனைகளையும் போக்கி, வளமுடன் நலமுடன் வாழ வைக்கும் கற்பக விருட்சமாகத் திகழ்கிறது. கந்த சஷ்டி விழா, பௌர்ணமி, கிருத்திகை தினங்களில் அபிஷேக ஆராதனைகளுடன் விழாக் கோலம் பூணும் மடாலயத்தில் வார வழிபாடுகளும் நடைபெறுகிறது.

கவி.கு. நயினாசாமி அவர்களுக்குப் பிறகு அவரது வாரிசான உயர்திரு கு.ந.பசுபதி எளிமையாகவும் இளமை வேகத்துடனும் பாம்பன் சுவாமிகளின் திருவருள், 'குமாரஸ் தவம்' இராமானுஜம் சுவாமிகளின் அன்பான மேற்பார்வை ஆகிய துணையுடனும் இயங்கி வருகிறார். இவரது நிர்வாகத்தில் ஆலய வளர்ச்சிக் குழுவினர் "குமரகுரு தாசரே சரணமய்யா" என்ற' தாரக மந்திரத்துடன் திரு நாமங்களை பரப்பியும், வழிபட்டும் வரும் அவர்களின் திருத்தொண்டு பெருகி, அருட்பணி வளர்க! வாழ்க!

---

ஓம் குமரகுருவே சரணமய்யா!

# சிதம்பரம் பாம்பன் சுவாமிகள் மடாலயத் தோற்றம்

ஸ்ரீமத் பாம்பன் குமரகுருதாச சுவாமிகள், செந்தமிழ்ப் பாடற் சுவையையும் வடமொழிச் சுலோகங்களின் கருத்துக்களையும் நன்குணர்ந்து அவற்றின் சாரமாக முருகப்பெருமான் ஒருவன் மீதே ஆறாயிரத்து அறுநூற்று அறுபத்தாறு பாடல்கள் இயற்றியவர்கள். பிரப்பன் வலசையில் கடுந்தவமியற்றி சித்திராபௌர்ணமி தினத்தன்று முருகனை நேரில் தரிசித்து அவனால் உபதேசம் பெற்றவர். நேரிய இல்லற வழியில் திகழ்த்த அவர்கள் முருகனின் உத்தரவு பெற்று துறவறம்பூண்டு தென்னாட்டின் பலதலங்களிலும் சென்று தொழுது "தலத்தில் சிதம்பரதலம்" என்னும் புகழ்பெற்ற சிதம்பரம்தலத்திற்கு வந்தார்கள். இங்கு சபாநாயகர் தெருவில் (தற்போது ஸ்ரீமத்-பாம்பன் சுவாமிகள் மடாலயம் உள்ள இடத்தில் அமர்ந்து) மற்றும் குயவன்பேட்டை (வரகூர்பேட்டை) பின்னத்தூர் முதலிய ஊர்களிலும் எழுந்தருளித் "தகராலயரகசியம்" "பரிபூரணானந்தபோதம்", "கந்தரொலி யலந்தாதி", "குகப்பிரம அருட்பத்து" 'திருப்பா", "நாலாயிரப்பிரபந்த விசாரம்" 'சைவசமயசரபம்". ஆகிய நூல்கள் இயற்றி அருள்நிலை பரவச் செய்தார்கள்,

சிதம்பரத்தில் சுவாமிகளின் சீடர் கவி.கு. நயினா சுவாமிகளால் ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள் மடாலயம் நிறுவப் பட்டது. இந்தமடாலயம் அமைக்கத் திருமுருக கிருபானந்த வாரியார் நியமனம் **செய்த** இடத்தில் 14-9-80 அன்று மடாலயம் அமைக்க **அடிக்கல்** நாட்டுவிழா நடைபெற்றது, திருவாளர் இரத்தின பாலசுப்பிரமணிய செட்டியார்

திருவிளக்கேற்றி விழாவினைத் துவக்கி வைக்க, பாம்பன் சுவாமிகள் பக்த சிரோன்மணி ரயில்வே தொழிற்சங்கத் தலைவர் திருவாளர் T.V. ஆனந்தன் Ex. M.L.P. அவர்கள் வாசற்கால் நாட்டினார்கள். ஆலயத்திருப்பணி சீரும் சிறப்புமாக நடைபெற்றுத் துன்மதி ஆண்டு தைமாதம் (7-2-82) நன்னாளில் பழநி ஸ்ரீல ஸ்ரீ தங்கவேல் சுவாமிகள் தலைமையில் குடமுழுக்கு விழா நடைபெற்று இங்கு ஆலயவளர்ச்சிக் குழுவினரால் நித்தியபூஜையும் விழாக்களும் சிறப்பாக நடைபெறுகின்றன.

இப்போது க.வி.கு. நயினாசாமி அவர்களின் குமாரர் N. பசுபதி அவர்கள் நன்முயற்சியால் இவ்வாலயத்தின் முன்புறத்தில் 'குமரகத்தில்' ஆறுபடை வீட்டு முருகக் கடவுளின் திருவுருவ (கற்சிலை) அமைக்கப்பெற்று இரண்டாம் முறை குடமுழுக்கு விழா ஸ்ரீமுக ஆண்டு ஆவணி மாதம் 4-ம்நாள் நடைபெற இருக்கின்றது. இவ் விழாவின் நினைவாக மலரும் இம்மலரில் பாம்பன் சுவாமி களின் ஆறுபடை வீட்டுப் பாடல்களில் ஆறும், மற்றும் சுவாமிகளின் தோத்திரங்களாகவும் சாத்திரங்களாகவும் உள்ள அருட்பாடல்களும், சுவாமிகள் மீது பாடிய சில தோத்திரப் பாடல்களும் இடம் பெற்றுள்ளன. மற்றும் இதில் சுவாமிகளின் சுருக்கமான வரலாறும், க.வி.கு நயினாசுவாமி யின் வரலாற்றுச் சுருக்கமும் பொருந்தித்திகழ்கின்றன.

இந்தக் குடமுழுக்கு விழா மலர் சிறப்பாக வெளிவர உதவி புரிந்த அன்பர்கள் அனைவர்க்கும் எங்கள் மனமர்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

**பாம்பன் சுவாமிகள் மடாலயம்**
**ஆலய வளர்ச்சிக் குழுவினர்**
**சிதம்பரம்.**

உ

ஓம் குஹேசாய நம
ஓம் குமரகுருதாச குருப்யோ நம
ஓம் குமரகுருவே சரணமய்யா

# குமரகமும் குமரகுருதாச சுவாமிகளும்

இருபதாம் நூற்றாண்டிலே வாழ்ந்த மகான்களால் ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள் மட்டுமே முருகனை நேரில் கண்டு உபதேசம் பெற்று "துறவிக்கு என்று எந்த இலக்கணம் உண்டோ அத்தனையும் கடைப்பிடித்து கடுந்துறவியாக இருந்து கந்தவேளின் கருணையால், அருணகிரிநாதரை தன் மானசீக குருநாதராக கொண்டு 6666 பாடல்களை பாடிய தவசீலர்.

இத்தகைய பேரருளை தன்னகத்தே கொண்டே பாம்பனடிகள் கி.பி. 1850-52இல் இராமேஸ்வரத்தில் அவதரித்து, முனியாண்டிப் பிள்ளை என்பவரிடம் கல்வி பயின்று கல்வி வேள்விகளில் சிறந்து விளங்கினார். "கங்கையைச்சடையிற் பரித்து" என்னும் மங்கலமுடன் முதல் பாடலை தொடங்கி நாளொன்றுக்கு ஒரு பாடல் வீதம் இயற்றலானார்கள். பின் சேதுமாதவ ஐயர் என்பவர் மூலம் திருவாறெழுத்து மந்திரத்தை உபதேசம் பெற்றார்கள். தமிழ் வடமொழி நூல்களைப் பற்றிய ஞானம், இலக்கண நயத்துடன் சுவாமிகளுக்கு அதிகரித்தது. மேலும், பெற்றோர்களின் விருப்பப்படி சுவாமிகளுக்கு திருமணமும் நடந்தேறி, இல்வாழ்க்கையை நல்லறமாகக் கொண்டு மகவுகளை பெற்று, அதன் பின்பு துறவறத்தை மேற்கொண்டு, முருகன் ஒருவனையே சதா சிந்திக்கலானார்கள்.

சுவாமிகளது வாழ்வில் பலமுறை முருகனின் திருவருட் செயல்கள் பல நடந்து வந்தது. தமது நாற்பத்து ஓரவது வயதில் பரப்பன் வலசையில் தவமிருந்து அகத்தியர், அருணகிரிநாதரோடு, கந்தவேளை கண்டு உபதேசம் பெற்று பிறகு வடதலை யாத்திரையாக பலதலங்களை தரிசித்துவரும் காலத்தே, சிதம்பரத்தில் தற்போது ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள் மடாலயம் அமைந்துள்ள இடத்திலும், குயவன்பேட்டை, பின்னத்தூர் முதலான இடங்களிலும், தங்கியிருந்து, ஸ்ரீ நடராஜ பெருமாளின் ஆலயத்தில் 108 உபநிடதங்களைப்பற்றி, சொற்பொழிவு நிகழ்த்தி தில்லை வாழ் அந்தணர்களால், முதன்முதலில் ஆயிரங்கால் மண்டபத்தில் சைவ சமயத்தைப் பற்றி பிரசங்கம் செய்தார்கள். இதன் விளைவாக வைணவர்களால், வழக்குகள் போடப்பட்டு செவ்வேற்கருணையால், சைவசமயத்திற்காக வாதாடிய நம் சுவாமிகளுக்கு வழக்கு சாதகமாகியது.

நம் சுவாமிகள் 1912 இல் பின்னத்தூரில் தொடங்கிய கந்தசஷ்டியில் முருகபிரானின் உத்திரவால் சுவாமிகளுக்கு வழக்கின் பொருட்டு வெற்றி கிடைத்தது. 1913 இல் சுவாமிகள் சென்னை செல்ல திருவுளங் கொண்டு, தமது சீடர் J. குமரகுருதாசம் பிள்ளையை அழைத்து. நாம் செய்த மகா கந்தசஷ்டி பூஜையை தவறாமல் செய்து வாருங்கள், மக்களின் காலமென்னும் தத்துவம் கந்தவேற் கையிலுள்ளது அதன் மூலம் நன்மையே செய்வார். பக்தர்களுக்கு அஷ்ட போகங்களையும் அளிப்பார். உள்ளன் போடு வேலனை விரும்பினால் போதும், வேண்டியதை அருளுவார் என ஆசிர்வதித்து சென்னை சென்றார்கள்.

சுவாமிகள் தொடங்கிச்செய்த மகாகந்தசஷ்டி பூஜையை பின்னத்தூரில் பல வருடங்கள் செய்து பிறகு சிதம்பரத் தைச் சார்ந்த எமதுதந்தையும், பாம்பனடிகளாரின்

மெய்ச்சீடருமான கவி. கு. நயினாசுவாமிகள் செய்யும்படி ஒப்படைத்து குமரகுருதாசம்பிள்ளை காசியாத்திரை சென்றார். 1918 இல் சுவாமிகள் தங்கியிருந்த இடத்தில் சிறு குடில் ஒன்றில் சுவாமிகளது மடாலயம் நிறுவப்பெற்று அது முதல் J. குமரகுருதாசம்பிள்ளை அவர்களின் திருவுளப்படி சுவாமிகளால் தொடங்கி வைத்த கந்தசஷ்டி பூஜை தொடர்ந்து நடந்து வந்தது. மேலும் கவி. கு. நயினா சுவாமி எனும் எம் தந்தையாகிய, சுவாமிகளது சீடரால் 1931 முதல் ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகளது குருபூஜையும் நடந்து வருகிறது. வருடத்தில் குருபூஜை, கந்தசஷ்டி பூஜைகளில் அன்னதானம், ஆடைதானம் முதலியவை சிறப்புற்று விளங்கி வருகிறது

1980 இல் குடிலாக இருந்த ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள் மடாலயத்திற்கு வருகைதந்த "சென்னை குமாரஸ்தவம் இராமானுஜம் சுவாமிகளின்" உறுதுணை மற்றும் ஆலோசனையின் பேரில், கவி.கு. நயினாசுவாமிகளால் நம் பாம்பனடிகளுக்கு ஆலயம் எழுப்பும் எண்ணம் உருவாயிற்று. தென்னிந்திய ரயில்வே தொழிலாளர் சங்கத் தலைவர் திரு T.V. ஆனந்தன் Ex. M.P. அவர்களின் பேருதவியாலும், தென்னிந்திய ரயில்வே தொழிலாளர்களாலும், ஆன்மீக அன்பர்களது பெரும் உதவியாலும், புதிதாக மடாலயம் திருப்பணி செய்து (5-2-82) துன்மதி வருடம் தைமாதம் 23ஆம் தேதி முதன்முறையாக குடமுழுக்கு விழா பழனி ஸ்ரீலஸ்ரீ சாது தங்கவேல் சுவாமிகளால் சிறப்பாக நடந்தேறியது.

1982 ஆம் வருடம் முதல் புதிதாக எழுந்தருளிய மடாலயம் படிப்படியான வளர்ச்சியை தன்னகத்தே கொண்டு வளர்ந்து வருகிறது. இம்மடாலயத்தில் பிரதி ஞாயிறு தோறும் வாரவழிபாட்டு பூஜையும், பிரதி வியாழன்

தோறும் கூட்டு வழிபாடும், செவ்வாய், வெள்ளியில் சிறப்பு வழிபாடும், வளர்பிறை சஷ்டி, கார்த்திகை, பௌர்ணமி விசாக சிறப்பு அபிடேக அலங்கார பூஜைகளும் சிறப்புற நடந்து வருகிறது. வருடந்தோறும், ஸ்ரீமத் பாம்பனடிகளது குருபூஜை விழா மூன்று தினங்கள், ஊர்வலத்துடன், விசேட தூப, தீப ஆராதனைகளுடன், ஆடை மற்றும் அன்ன தானத்துடன் நடந்து வருகிறது. மகா கந்தசஷ்டி பூஜையும் எட்டு தினங்கள் நடந்து வருகிறது. ஆடிக்கார்த்திகை, மயூர வாகன சேவனவிழா, அருணகிரிநாதர் குருபூஜை, பங்குனி உத்திரபெருவிழா முதலான பூஜைகள் சிறப்புற ஆன்மீக அன்பர்களது உதவியால் நடந்து வருகிறது.

இம்மடாலயத்தில் வீற்றிருக்கக்கூடிய ஸ்ரீபழனி யாண்டவரும், ஸ்ரீமத்பாம்பனடிகளும், அகத்திய, அருணகிரி நாத முனீந்திரர்களும் தன்னை நாடிவரும் பக்தர்களுக்கு அருளை வாரி வழங்கி வருகிறார்கள். சுவாமிகளை நாடி வந்த பக்தர்கள் அடைந்த பெரும் பலன்கள்பல.

அவற்றுள் சில.

1 இளம்பிள்ளை வாதத்தால் பாதிக்கப்பட்ட சிறுவன் சுவாமிகள் அருளால் குணமடைந்து நடந்து வருவது.

2 புற்றுநோய் குணமானது.

3 தீராத பிணிகள் தீர்ந்து போவது.

4 ஊமைக் குழந்தைகள், பிறவி ஊமைகள் பேசுவது

5 வேலையில்லா பட்டதாரிகள் வேலைபெறுவது

6 திருமணமாகாத பலமகளிருக்கு திருமணமாவது

7 28வருடங்கள், 13வருடங்கள் திருமணமாகி குழந்தை பேறு இல்லாது சுவாமிகளது "வேற்குழவி வேட்கை" பாடலைப் படித்து குழந்தை செல்வம் பெற்றமை.

8 விவசாயத்தில் தண்ணீர் இல்லாது, தவித்த பலர் சுவாமிகளது அருளால், நிலத்தடிநீரை பெற்று விவசாயத்தை செம்மையாக நடத்திவருவது

9 பிரதி வியாழன் தோறும் கூட்டுவழிபாட்டில் பங்கு பெறும் அன்பர்களது பிணிகள், பிரச்சனைகள் மனக்கவலைகள் அனைத்தும் தீர்ந்து பலன்பெறுதல் என பல அருட் செயல்களை கூறிக்கொண்டே போகலாம்.

இத்தகைய பல சிறப்புகளை தன்னகத்தே, கொண்ட இம்மடாலயம் ஆறுபடை வீட்டு கருவறை தெய்வ விக்ரகங்களின் பிரதிஷ்டை, ஆன்மீக அன்பர்களது வேண்டுகோளின் படி, அவர்களது விருப்பத்துடனான பேருதவியுடன் தற்போது பிணிதீர்க்கும் "குமரகம்" எனும் மடாலய முன் மண்டபத்தில் செய்யப்பெற்று வர்ண வேலைகள் நடைபெற்று, சுற்றிலும் இரும்புக் கதவுகள் போடப்பெற்று, துவார பாலகர்கள் அமைக்கப்பெற்று, ஆன்மீக பெரும் தொண்டாக, ஆன்றோர்களாலும் சான்றோர்களாலும், பக்தர்களாலும் 20-8-93 ஸ்ரீமுக வருடம் ஆவணி மீ 4-ஆம் தேதி வெள்ளிக்கிழமை காலை தமிழ் **மகா கும்பாபிஷேகம்** நடை **பெறுகிறது.** நாட்டில் வழிபடும் மூர்த்திகளாக ஆறுபடை வீட்டு முருகன் அமைந்திருப்பது இம்மடாலயத்திற்கு ஒரு தனிச் சிறப்பை தருகிறது. மென்மேலும் பலவளர்ச்சி நிலைகளை

கொண்ட ஆறுபடை வீடமைந்த ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகளது மடாலயத்தை ஆன்மீக அன்பர்கள் பலரும் வந்து தரிசித்து, அவனருளாலே அவன்தாள் வணங்கி இகபர நலன்களை இனிதே பெறுவார்களாக.

நன்றி வணக்கம் சுப்ரமண்யோம்.

குமரகுரு, குமரகுரு, குமரகுரு
ஓம் குமரகுருவே சரணமய்யா!

மாதா, பிதா, குரு, தெய்வம்
என போற்றி வணங்கும் அடியார்க்கடியவன்,
**Dr. கு.ந. பசுபதி** B.A H.T.I.M,P.C.H.M.
பரம்பரை டிரஸ்டி & நிர்வாகி, ஆறுபடை
வீடமைந்த ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள் மடாலயம்
40/, சபாநாயகர் தெரு சிதம்பரம்-608001





# திருப்புகழ்-விநாயகர் துதி

கைத்தலம் நிறைகனி அப்பமொ டவல்பொறி
கப்பிய கரிமுகன் அடிபேணி
கற்றிடும் அடியவர் புத்தியில் உறைபவ
கற்பகம் எனவினை கடிதேகும்.

மத்தமும் மதியமும் வைத்திடும் அரன்மகன்
மற்பொரு திரள்புய மதயானை
மத்தள வயிறனை உத்தமி புதல்வனை
மட்டவிழ் மலர்கொடு பணிவேனே

முத்தமிழ் அடைவினை முற்படு கிரிதனில்
முற்பட எழுதிய முதல்வோனே
முப்புரம் எரிசெய்த அச்சிவன் உரைரதம்
அச்சது பொடிசெய்த அதிதீரா

த்துய ரதுகொடு சுப்பிர மணிபடும்
அப்புன மதனிடை யிபமாகி
அக்குற மகளுடன் அச்சிறு முருகனை
அக்கண மணமருள் பெருமாளே.

**ஸ்ரீமத் அகத்திய மாமுனீந்த்ர சுவாமிகள் துதி:**

காசியி னின்றும் போந்து கந்தர்தம் அருளைப்பெற்று
மாசிலாக் கச்சி மூதூர் மன்னிவீற் றிருந்து பூமேல்
ஆசிலாத் தமிழ் பரப்பி அருந்தமிழ்க் குரவு பூண்ட
தேசினான் மலய வெற்பின் குறுமுனி திருத்தாள் போற்றி!

### ஸ்ரீமத் அருணகிரிநாத சுவாமிகள் துதி:

அருவமொரு நான்காகி யுருவமொரு நான்காகி
வறையி ரண்டும்
மருவியுள வுருவருவ மொன்றாகி முத்திறமும்
வழுத்த வொண்ணாப்

பெருவெளிக்கு மப்பாலா யுள்ளபொரு ளீதெனவே
பெரிதும் சேயோன்
ஒருவனையே புகழ்ந்தவரு ளருணகிரி சேவடிப்போ
துளந்துள் வைப்பாம்.

## பாம்பன் சுவாமிகள் துதி

பாம்பனெனும் பதிமுளைத்த பவளக் குன்றே
பழம் பாண்டித் தமிழ்பொழிலே பண்பா ரில்லத்
தீம்பயிரே அன்புகொழி திரையே தெய்வத்
திறங்கண்ட அறநிலையே செகத்தி லுற்ற

கூம்பலற எழுகதிரே குழந்தை வேலன்
குகநெறியே நெறியென்ற குருவே நீதி
ஓம்புகவென் றுரைத்தொழுகி உலகில் வாழ்ந்த
உயர்குமரகுருதாச ஒளியே போற்றி

## பாம்பன் சுவாமிகளின் மனவுறுதி

"படமோட்டும் கருணைதனை மறவேனெஞ்
சனவனவும் மாற்றார் நூலைத்
தொடமாட்டே னவருரைக்கு முரைகேளே
னியாயத் தொடக்கர் கோட்குட்

படமாட்டே னருள்சுரந்து வினாயவொரு
மொழிப்பயனிற் படருநோக்கம்
விடமாட்டே னினிதளித்தி யெனதுகுகப்
பிரமமென விளங்கெம் மானே.''

— திருப்பா

# திருப்புகழ்

நாத விந்துக லாதீ நமோநம
வேத மந்த்ரசொ ரூபா நமோநம
ஞான பண்டித ஸாமீ நமோநம வெகுகோடி

நாம சம்புகு மாரா நமோநம
போக அந்தரி பாலா நமோநம
நாக பந்தம யூரா நமோநம பரசூரர்

சேத தண்டவி நோதா நமோநம
கீத கிண்கிணி பாதா நமோநம
தீர சம்ப்ரம வீரா நமோநம கிரிராஜ

தீப மங்கள ஜோதீ நமோநம
தூய அம்பல லீலா நமோநம
தேவ குஞ்சரி பாகா நமோநம அருள்தாராய்

ஈத லும்பல கோலால பூஜையும்
ஓத லுங்குண ஆசார நீதியும்
ஈர முங்குரு சீர்பாத சேவையு மறவாத

ஏழ்த லம்புகழ் காவேரி யால் விளை
சோழ மண்டல மீதே மனோகர
ராஜ கெம்பீர நாடாளு நாயக அயலூரா

ஆத ரம்பயி லாரூரர் தோழமை
சேர்தல் கொண்டவ ரோடே முனாளினில்
ஆடல் வெம்பரி மீதேறி மாகயி லையிலேகி

ஆதி யந்தவு லாவாசு பாடிய
சேரர் கொங்குவை காவூர் நனாடதில்
ஆவி னன்குடி வாழ்வான தேவர்கள் பெருமாளே

## பாம்பன் சுவாமிகள் பாடிய முதற்பாடல்

கங்கையைச் சடையிற் பறித்துமறி மழுவங்
கரத்திற் றரித்துருத்ரங்
காட்டுமுவை யதளசைத் தணிமன்றி லாடுகங்
காளற் கபின்னமாய
சங்கரி சடாதாரி சருவாணி கல்யாணி
தற்பரி பவானி தந்த
தந்திமுக னோடுமற் றைந்து பெயர் நீர்மையுந்
தன்னகத் துளதெய்வமே
மங்கையர்த மின்பெனுந் துன்பினை விரும்பு மட
மார்க்கத்தை விட்டதீதர்
வாழ்வுக்கும் வாழ்வாய வாழ்வினை யளிக்குமுன்
மலரடி தியானிக்கவும்
அங்கையினி னெல்லியங் கனியெனத் திருவருளை
யடையவுங் கருணைநல்காய்
அருமறை புகழ்ந்த திரு முருகசிவ சரவணத்
தாதியே அமரர்கோவே.

# பாம்பன் சுவாமிகள் பாடிய ஆறுபடை வீட்டுப் பாடல்கள்

(குமர குருதாச சுவாமிகள் பாடல்)

## 1. திருப்பரங்கிரி

ஆதியிடை யீறெனுங் காலங் கடந்ததா
யகிலமுக் குணரகிதமாய்
அத்துவித சைதன்ய சுத்தபர தத்துவ
வசஞ்சல விலாச வெளியாய்
நீதியாய் நிறைகருணை யூறுசுக வாரியாய்
நிட்களா னந்தசிவமாய்
நின்றபர தெய்வமே தொண்டர்தொழு சைவனே
நின்னாம மந்த்ரமொருகால்
ஓதினெண் ணம்போலெவ் வடயமும் விநாடியி
லொதுக்காது கூடுமெனு நூல்
ஓகையா லத்தைநா னாணாளு மோதியு
முளக்கவலை யோய்ந்ததில்லை
தீதிலோ யிதனையிப் பிறவியின் பயனென்று
தெளிவனோ யாதுநினைவேன்
சிறைப்புண்மலி காவடர் திருப்பரங் கிரிமேவு
சேயே சிவானந்தமே.

## 2. திருச்செந்தில்

காரொத்த குழலிலே மேரொத்த முகையிலே
கஞ்சமலர் வதனத்திலே
கன்னனிகர் மொழியிலே கயலனைய விழியிலே
கமழ்கின்ற வாடைதனிலே

சீரற்ற மனதைச் செலுத்தியிஙன் விருதுன்பு
தெரியா திதேச்சுக மென்ச்
சிக்கியின மலைவனோ தெருடரு விர்த்தியைச்
சிந்தைசெய் தாளாவனோ
கூருற்ற குசலரொடு கூடியினி துய்வனோ
கோளர் வழி நின்றுழல்வனோ
கூர்த்தவுணர் வில்லாத வேழையறி யேனெனைக்
கொள்ளவுள நீ கருணையால்
ஈரத் திரங்கொடுத் தாசறுத் தருளுநாள்
எந்த நாள் சொல்லியருளே
இஞ்சிவளை மந்த்ரமலி செந்திலி லமர்ந்தவெழில்
எந்தையே கந்தசிவமே.

## 3. திருப்பழநிமலை

ஆழிசுல வும்புவி யெலாமொளிசெய் விண்ணின்மணி
யனையமணி முடியிலங்க
அகலுள்வட வரையைச் சடாலென்ன மோதிடற்
கானமொய்ம் பணிதுலங்க
நாழியொ ரனைக்குணிசி சரருயிர் முருக்குமொரு
நலிவில்வடி வேல்விளங்க
நடுவற்ற வீனப் பிசாசுகள் பிரேதங்க
ணடைவிட் டுளங்கலங்க
வேழமிவ ரிந்திராதி திசைநாதர் தேவநாதர்
வெருவுற்று வடிவணங்க
விண்டலமு மண்டலமு மசைவற்று நிலைபெசுகி
மேருகிரி யுங்குலுங்க
ஊழிமுடி வெனநவிர மேறுமுதல் வாவென்ற
னூறுகெட வென்றுவருவாய்
உலகனைத் தும்புகழ் திருப்பழநி மலைமேவு
மோங்கார குருநாதனே.

## 4. திருவேரகம்

சீர்மல்கு வாதுளச் சுருதிநுவல் வண்ணஞ்
சிறப்புள்ள பிரத்மமகா
சிருட்டியின் மகேசுர ருளக்கமல் மதினின்றொர்
திவ்யபிர மக்குழ்வியர்ய்
ஏர்மல்கு தேவர்தொழ வெளிவந்தவ் வீசுரர்க்
கினியசுத னர்ய்நின்றுமேல்
இடையிடை மகாவிறல் ருத்திர்பெரு மானா
லிழைக்கின்ற வெகுவினோதச்
சார்மல் கவாந்தர சிருட்டுயிற் சீகண்டர்
தன்குமர னென்னவந்து
சத்யசன் மார்க்கவடி யாரைப் புரந்தருள்
சதாசிவிப் பொரு ளேதுரால்
வேர்மல் ககங்கார விடபியா நிற்குமெனை
மெய்யடியில் வைக்கநினைதி
வீரமுள தேவர்தவ மேவுறுவர் தொழுததிரு
வேரக மமர்ந்தவேளே.

## 5. திருக்குன்றுதோறாடல்.

ஞாலத் துதித்தம்மை ய்ம்மஞ் சுவைத்தபினு
ணாயிக் கயின்று வாய்மை
நவிலுமோர் ரகலியம் போல்வளர்ந் தறிவான
நலமேது மறியாவெனக்
காலத் தமாலத்தி லேதுயின் றோனும்மறை
யயனும் புகழ்ந்தவுன்சே
வடியொன் றலாதுபிற தெய்வந் தொழாமன
தளித்தருட் போலின்னு மென்

காலத்தை வாளா கழிக்கா ததீத சிவ
கைவல்ய மருவ வருளாய்
கண்ணிணைக் கெட்டாத விண்ணென விரிந்துமெய்க்
கண்ணாளர் காணுமாறு
மாலைத் துணங்கறலு நீமத்திவாவுமின்
மகாநிட்ட நிலையில் வருவோய்
மங்காத வின்பர்செறி குன்றுதோ றாடல்வதி
மஞ்சார் பெருந்தகையனே.

## 6 திருச்சோலை மலை

பரியேற நினையொருவன் முதுகேற வலியற்ற
பண்புபோ னுன்பதத்தைப்
பார்க்கவதி மோகுற்றம் மார்க்கநெறி யறியாது
பலவித நினைந்துருப்ப
எரியின்மெழு கெனவுருகு கின்றே னதர்க்கொர்தடை
யிலைகொலோ நின்கணுன்னை
ஏழைபங் காளனென் றோதுமுறை மைக்கு நீ
யென்னவகை சொல்வைபெரிய
பரிவொடு திருக்கரத் தாலெனை யணைத்தெனது
பருவர லகற்றியருளாய்
பாரப் பணாமகுட சேடனைச் சிறுவிரற்
பணியா மிலைந்தகரிய
சுரியலம் பிகையருட் டொண்டர்கற் கண்டெனும்
சுகவருட் கருவூலமே
தோகைமயி லேறிநட மாடுவள நீடுநற்
சோலைமலை மேவுகுகனே.

# பகைகடிதல்

திருவளர் சுடர் உருவே, சிவைகரம் அமர்உருவே,
அருமறை புகழ் உருவே, அறவர்கள் தொழும் உருவே
இருள்தபும் ஒளி உருவே, என நினை எனது எதிரே,
குருகுகண் முதல்மயிலே, கொணர்தியுன் இறைவனையே

மறைபுகழ் இறைமுனரே, மறைமுதல் பகர்உருவே,
பொறைமலி உலகுஉருவே, புனநடை தரும்உருவே,
இறையிள முகஉருவே, எனநினை எனது எதிரே,
குறைவுஅறு திருமயிலே, கொணர்தியுன் இறைவனையே

இதரர்கள் பலர்பொரவே, இவண் உறை எனது எதிரே,
மதிரவி பலனதேர், வளர்சரண் இடைஎனமா,
சதுரொடு வருமயிலே, தடவரை அசைவு உறவே,
குதிதரும் ஒருமயிலே, கொணர்தியுன் இறைவனையே

பவநடை மனுடர்முனே, படர்உறும் எனதுஎதிரே.
நவமணி நுதலணியோர், நகைபல மிடறுஅணிமால்,
சிவணிய திருமயிலே, திடனொடு நொடிவலமே,
குவலயம் வரும்மயிலே, கொணர்தியுன் இறைவனையே

அழகுஉரு மலர்முகனே, அமரர்கள் பணிகுகனே,
மழஉரு உடையவனே, மதி நனி பெரியவனே,
இழவுஇலர் இறையவனே, என நினை எனது எதிரே;
குழகுஅது மிளிர்மயிலே, கொணர்தியுன் இறைவனையே

இணை அறும் அறுமுகனே, இத சசி மருமகனே,
இண்ர்அணி புரள்புயனே, எனநினை எனதுஎதிரே,
கணபண அரவு உரமே, கலை (வு) உற எழுதரும்ஓர்
குணம்உறு மணிமயிலே, கொணர்தியுன் இறைவனையே

எளியனென் இறைவ, குகா எனநினை எனநுளதிரே,
வெளிநிகழ் திரள்களை மீன், மிளிர்சினை எனமிடைவான்
பளபள எனமினுமா பலசிறை விரிதருநீள்,
குளிர்மணி விழிமயிலே, கொணர்தியுன் இறைவனையே

இலகுஅயில் மயில்முருகா, எனநினை எனதுஎதிரே,
பலபல களமணியே, பலபல பதமணியே
கலகல கலஎனமா கவினொடு வரும் மயிலே,
குலவிடு சிகைமயிலே, கொணர்தியுன் இறைவனையே

இகல்அறு சிவகுமரா, எனநினை எனதுஎதிரே,
சுகமுனி வரர்எழில் ஆர், சுரர்பலர் புகழ் செயவே,
தொகுதொகு தொகுஎனவே, சுரநடம் இடும்மயிலே,
குகபதி அமர்மயிலே, கொணர்தியுன் இறைவனையே

கருணைபெய் கனமுகிலே, கடமுனி பணிமுதலே,
அருணையன் அரன் எனவே, அகம்நினை எனது எதிரே,
மருமலர் அணிபலவே, மருவிடும் களமயிலே,
குருபல அவிர்மயிமே, கொணர்தியுன் இறைவனையே.

இத்திருப்பதிகத்தைக் காலை மாலை பூசித்துப் பக்தி பிறங்கப் பாடுவோர், திருமயின் மீது செவ்வேட் பரமனைந் தரிசிப்பர்: பகையை வெல்வர்.



# பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள் அருளிச்செய்த

# சண்முக கவசம்

அண்டமா யவனி யாகி யறியொணாப் பொருள தாகித்
தொண்டர்கள் குருவு மாகித் துகளறு தெய்வ மாகி
எண்டிசை போற்ற நின்ற என்னருு ளீச னான
திண்டிறற் சரவ ணத்தான் றினமுமென் சிரசைக் காக்க. 1

ஆதியாங் கயிலைச் செல்வ னணிநெற்றி தன்னைக் காக்க
தாதவிழ் கடப்பந் தாரான் றானிரு நுதலைக் காக்க
சோதியாந் தணிகை யீசன் றுரிசிலா விழியைக் காக்க
நாதனாங் கார்த்தி கேய னாசியை நயந்து காக்க. 2

இருசெவி களையுஞ் செவ்வே ளியல்புடன் காக்க வாயை
முருகவேள் காக்க நாப்பன் முழுதுநற் குமரன் காக்க
துரிசறு கதுப்பை யானைத் துண்டனார் துணைவன் காக்க
திருவுடன் பிடரி தன்னைச் சிவசுப்ர மணியன் காக்க 3

ஈசனாம் வாகு லேய னெனதுகந் தரத்தைக் காக்க
தேசுறு தோள்வி லாவுந் திருமகண் மருகன் காக்க
ஆசிலா மார்பை யீரா றாயுதன் காக்க என்றன்
ஏசிலா முழங்கை தன்னை யெழிற்குறிஞ் சிக்கோன் காக்க 4

உறுதியாய் முன்கை தன்னை யுமையிள மதலை காக்க
தறுகணே றிடவே யென்கைத் தலத்தைமா முருகன் காக்க
புறங்கையை மயிலோன் காக்க பொறிக்கர விரல்கள் பத்தும்
பிறங்குமரன் மருகன் காக்க பின்முது கைச்சேய் காக்க 5

ஊணிறை வயிற்றை மஞ்ஞை யூர்தியோன் காக்க வம்புத்
தோளிமிர் சுரசே னுந்திச் சுழியினைக் காக்க குய்ய
நாணினை யங்கி கௌரி நந்தனன் காக்க பீஜ
ஆணியைக் கந்தன் காக்க வறுமுகன் குதத்தைக் காக்க 6

எஞ்சிடா திடுப்பை வேலுக் கிறைவனார் காக்க காக்க
அஞ்சக னமொரி ரண்டு மரன்மகன் காக்க காக்க.
விஞ்சிடு பொருட்காங் கேயன் விளரடித் தொடையைக் காக்க
செஞ்சர ணேச வாசான் றிமிருமுன் றொடையைக் காக்க 7

ஏரகத் தேவ னென்றா ளிருமுழங் காலுங் காக்க
சீருடைக் கணைக்கால் தன்னைச் சீரலை வாய்த்தே காக்க
நேருடைப் பரடி ரண்டு நிகழ்பரங் கிரியன் காக்க
சீரிய குதிக்கால் தன்னைத் திருச்சோலை மலையன் காக்க. 8

ஐயுறு மலையன் பாதத் தமர்பத்து விரலுங் காக்க
பையுறு பழநி நாத பரனகங் காலைக் காக்க
மெய்யுடன் முழுது மாதி விமலசண் முகவன் காக்க
தெய்வநா யகவி சாகன் றினமுமென் னெஞ்சைக் காக்க. 9

ஒலியெழ வுரத்த சத்தத் தொடுவரு பூதப் ரேதம்
பலிகொளி ராக்க தப்பேய் பலகணத் தெவையா னாலுங்
கிலிகொள வெனைவேல் காக்க கெடுபரர் செய்யுஞ் சூன்யம்
வலியுள மந்த்ர தந்த்ரம் வருத்திடா தயில்வேல் காக்க. 10

ஓங்கிய சீற்ற மேகொண் டுவணிவில் வேல்சூ லங்கள்
தாங்கிய தண்ட மெஃகந் தடிபர சீட்டி யாதி
பாங்குடை யாயு தங்கள் பகைவரென் மேலே யோச்சின்
தீங்குசெய் யாம லென்னைத் திருக்கைவேல் காக்க காக்க 11

ஒளவிய முளரு னுண்போ ரசடர்பே யரக்கர் புல்லர்
தெவ்வர்க ளெவரா னாலுந் திடமுட னெனைமற் கட்டத்
தவ்வியே வருவா ராயிற் சராசர மெலாம்பு ரக்குங்
கல்வுடைச் சூர சண்டன் கையயில் காக்க காக்க. 12

கடுவிடப் பாந்தள் சிங்கங் கரடிநாய் புலிமா யானை
கொடியகோ ணாய்கு ரங்கு கோலமார்ச் சாலஞ் சம்பு
நடையுடை யெதனா லேனு நானிடர்ப் பட்டி டாமற்
சடிதியில் வடிவேல் காக்க சானவி முளைவேல் காக்க. 13

ஙகரமே போற்ற ழீஇ ஞானவேல் காக்க வன்புள்
சிகரிதே ணண்டுக் காலி செய்யனே றாலப் பல்லி
நகமுடை யோந்தி பூரா னளிவண்டு புலியின் பூச்சி
உகமிசை யிவையா லெற்கோ ரூறிலா தைவேல் காக்க. 14

சலத்திலுய் வன்மீ னேறு தண்டுடைத் திருக்கை மற்றும்
நிலத்திலுஞ் சலத்தி லுந்தா னெடுந்துயர் தரற்கே யுள்ள
குலத்தினா னான்வ ருத்தங் கொண்டிடா தவ்வவ் வேளை
பலத்துட னிருந்து காக்க பாவகி கூர்வேல் காக்க. 15

ஞமலியம் பரியன் கைவேல் நவக்கிர கக்கோள் காக்க
சுமவிழி நோய்கள் தந்த சூலையாக் கிராண ரோகம்
திமிர்கழல் வாதஞ் சோகை சிரமிடி கர்ண ரோகம்
எமையணு காம லேபன் னிருபுயன் சயவேல் காக்க 16

டமருகத் தடிபோல் நைக்குந் தலையிடி கண்ட மாலை
குமுறுவிப் புருதி குன்மங் குடல்வலி யீழை காசம்
நிமிரொணா திருத்தும் வெட்டை நீர்ப்பிர மேக மெல்லாம்
எமையடை யாம லேகுன் றெறிந்தவன் கைவேல் காக்க 17

இணக்கமில் லாத பித்த வெரிவுமா சுரங்கள் கைகால்
முணக்கவே குறைக்குங் குஷ்ட மூலவெண் முளைதீ மந்தம்
சணத்திலே கொல்லுஞ் சன்னி சாலமென் றறையு மிந்தப்
பிணிக்குல மெனையா ளாமற் பெருஞ்சத்தி வடிவேல்
காக்க 18

தவனமா ரோகம் வாதஞ் சயித்திய மரோச கம்மெய்
சுவறவே செய்யு மூலச் சூடிளைப் புடற்று விக்கல்
அவதிசெய் பேதி சீழ்நோ யண்டவா தங்கள் சூலை
ஏவையுமென் னிடத்தெய் தாம லெம்பிரான் றிணிவேல்
காக்க 19

நமைப்புறு கிரந்தி வீக்க நணுகிடு பாண்டு சோபம்
அமர்த்திடு கருமை வெண்மை யாகுபஃ றொழுநோய் கக்கல்
இமைக்குமுன் னுறுவ லிப்போ டெழுபுடைப் பகந்த ராதி
இமைப்பொழு தேனு மென்னை யெய்தாம அருள்வேல்
காக்க. 20

பல்லது கடித்து மீசை படபடென் றேது டிக்கக்
கல்லினும் வலிய நெஞ்சங் காட்டியே யுருட்டி நோக்கி
எல்லினுங் கரிய மேனி யெமபடர் வரினு மென்னை
ஒல்லையிற் றார காரி ஓம்ஐம் ரீம்வேல் காக்க. 21

மண்ணிலு மரத்தின் மீதும் மலையிலு நெருப்பின் மீதும்
தண்ணிறை ஜலத்தின் மீதுஞ் சாரிசெய் யூர்தி மீதும்
விண்ணிலும் பிலத்தி னுள்ளும் வேறெந்த விடத்து
மென்னை
நண்ணிவந் தருளார் சஷ்டி நாதன்வேல் காக்க காக்க.
22

யகரமே போற்சூ லேந்து நறும்புயன் வேல்முன் காக்க
அகரமே முதலா மீரா றம்பகன் வேல்பின் காக்க
சகரமோ டாறு மானோன் றன்கைவேல் நடுவிற் காக்க
சிகரமின் றேவ மோலி திகழைவேல் கீழ்மேல் காக்க. 23

ரஞ்சித மொழிதே வானை நாயகன் வள்ளி பங்கன்
செஞ்சய வேல்கி ழக்கிற் றிறமுடன் காக்க வங்கி
விஞ்சிடு திசையின் ஞான வீரன்வேல் காக்க தெற்கில்
எஞ்சிடாக் கதிர்கா மத்தோ னிகலுடைக் கரவேல் காக்க. 24

லகரமே போற்கா ளிங்க னல்லுடல் நெளிய நின்று
தகரமர்த் தனமே செய்த சங்கரி மருகன் கைவேல்
நிகழெனை நிருதி திக்கில் நிலைபெறக் காக்க மேற்கில்
இகலயில் காக்க வாயு வினிற்குகன் கதிர்வேல் காக்க. 25

வடதிசை தன்னி லீசன் மகனருட் டிருவேல் காக்க
விடையுடை யீசன் றிக்கில் வேதபோ தகன்வேல் காக்க
நடக்கையி லிருக்கு ஞான்று நவில்கையி னிமிர்கை யிற்கீழ்க்
கிடக்கையிற் றூங்கு ஞான்று கிரிதுளைத் துளவேல் காக்க 26

இழந்துபோ காத வாழ்வை யீயுமுத் தையனார் கைவேல்
வழங்குநல் லூணுண் போது மால்விளை யாட்டின் போதும்
பழஞ்சுரர் போற்றும் பாதம் பணிந்துநெஞ் சடக்கும் போதும்
செழுங்குணத் தோடே காக்க திடமுடன் மயிலுங் காக்க 27

இளமையில் வாலி பத்தி லேறிடு வயோதி கத்தில்
வளரறு முகச்சி வன்றான் வந்தெனைக் காக்க காக்க
ஒளியெழு காலை முன்னெ லோஞ்சிவ சாமி காக்க
தெளிநடு பிற்ப கற்கால் சிவகுரு நாதன் காக்க 28

இறகுடைக் கோழித் தோகைக் கிறைமுனி ராவிற் காக்க
திறலுடைச் சூர்ப்ப கைத்தே திகழ்பினி ராவிற் காக்க
நறவுசேர் தாட்சி லம்ப னடுநிசி தன்னிற் காக்க
மறைதொழு குழக னெங்கோன் மாறாது காக்க காக்க 92

இனியெனைத் தொண்டரோடு மிணக்கிடுஞ் செட்டி காக்க
தனிமையிற் கூட்டந் தன்னிற் சரவண பவனார் காக்க
நனியனு பூதி சொன்ன நாதர்கோன் காக்க வித்தைக்
கனிவொடு சொன்ன தாசன் கடவுள்தான் காக்க வந்தே. 30

சண்முக கவசம் முற்றிற்று

# பஞ்சாமிர்த வண்ணம்

## 1. பால்

தனந்த தந்தன தனந்தனா
தனந்த தந்தன தனந்தனா
தனந்த தந்தன தனந்தனா
தனந்த தந்தன தனந்தனா

தந்தத் தந்தன தந்தானா
தந்தத் தந்தன தந்தானா
தந்தத் தந்தன தந்தானா
தந்தத் தந்தன தந்தானா

தாந்த தந்தனனா தன தாந்த தந்தனனா
தாந்த தந்தனனா தன தாந்த தந்தனனா
தனந்த தந்தன தனந்த தந்தன
தனந்த தந்தன தனந்தனா

தனந்த தந்தன தனந்த தந்தன
தனந்த தந்தன தனந்தனா=தனதன தனதானா

இலங்கு நன்கலை விரிஞ்சனோ
டனந்த னுஞ்சத மகன்சதா
விபன்கோ டம்பியர் களும்பொனா
டுறைந்த புங்கவர் களுங்கெடா

தென்றுங் கொன்றைய ணிந்தோளார்
தந்தண் டின்றி ராளுஞ்சேயா
மென்றன் சொந்தமி னுந்தீதே
தென்றங் கங்கணி கண்டாயோ

தேந்து வன்படைவேல் வலி சேர்ந்த திண்புயமே
யேய்ந்த கண்டகர்கா றொடை மூஞ்சி கந்தரமோ
டெ..லும்பு றுந்தலை களுந்து ளிந்திட

வடர்ந்த சண்டைக டொடர்ந்துபே
யெனுங்கு னுங்குக ணிணங்க ளுண்டரன்
மகன்பு றஞ்சய மெனுஞ்சொலே
—களமிசையெழுமாறே

துலங்கு மஞ்சிறை யலங்கவே
விளங்க வந்தவொர் சிகண்டியே
துணிந்தி ருந்துயர் கரங்கண்மா
வரங்கண் மிஞ்சிய விரும்புகூர்

துன்றுந் தண்டமொ டம்பீர்வாள்
கொண்டண் டங்களி னின்றாடே
சுண்டும் புங்கம ழிந்தேலா
தஞ்சும் பண்டசு ரன்சூதே

சூழ்ந்தெ ழும்பொழுதே கரம் வாங்கி யொண் டிணிவே
றாண்டி நின்றவனே கிளை யோங்க நின்றுளமா
துவந்து வம்பட வகிர்ந்து வென்றதி

வலம்பொ ருந்திய நிரஞ்சனா
சுகங்கொ ளுந்தவர் வணங்கு மிங்கித
முகந்த சுந்தர வலங்க்குதா
—அரிபிரமருமேயோ

அலைந்து சந்தத மறிந்திடா
தெழுந்த செந்தெழ லுடம்பினா
ரடங்கி யங்கமு மிறைஞ்சியே
புசழ்ந்த வன்றுமெய் மொழிந்தவா

அங்கிங் கென்பத றுந்தேவா
யெங்குந் துன்றிநி றைந்தோனே
யண்டுந் தொண்டர்வ ருந்தாமே
யின்பந் தந்தரு ளுந்தாளா

ஆம்பி தந்திடுமா மணி பூண்ட வந்தளையா
வாண்ட வன்குமரா வெனை யாண்ட செஞ்சரணா

அலர்ந்த விந்துள வலங்க லுங்கடி
செறிந்த சந்தன சுகந்தமே
யணிந்து குன்றவர் நலம்பொ ருந்திட
வளர்ந்த பந்தணை யெனும் பெணாள்
—தனையணை மணவாளா

குலுங்கி ரண்டுமு கையுங்களா
ரிருண்ட கொந்தள வொழுங்கும்வேல்
குரங்கு மம்பக மதுஞ்செவா
யதுஞ்ச மைந்துள மடந்தைமார்

கொஞ்சும் புன்றொழி லுங்காலோ
ருஞ்சண் டன்செய லுஞ்சூடே
கொண்டங் கம்பட ருஞ்சீழ்நோ
யண்டந் தந்தம்வி ழும்பாழ்நோய்

கூன்செ யும்பிணிகால் கரம் வீங்க முங்கலும் வாய்
கூம்ப ணங்குணோய் துயர் சார்ந்தபுன் கணுமே
குயின்கொ ளுங்கடல் வளைந்த விங்கெனை
யடைந்தி டும்படி யினுஞ்செயேல்

குவிந்து நெஞ்சமு ளணைந்து நின்பத
நினைந்து யும்படி மனஞ்செயே
—திருவருண் முருகோனே

## 2 தயிர்

தனத்தன தந்தன தனத்தன தந்தன
தனத்தன தந்தன தனத்தனதந்தன
தா தனனா தனனா தனனா

தனந்த தந்தன தனந்த தந்தன
தனந்த தந்தன தனந்த தந்தன
தா தனனா தனனா தனனா தன
— தன தன தானா

கடித்துண ரொன்றிய முகிற்குழ லுங்குளிர்
கலைப்பிறை யென்றிடு நுதற்றில கந்திகழ்
கா சுமையா ளுளமா மகனே

களங்க விந்துவை முனிந்து நன்கது
கடந்து விஞ்சிய முகஞ்சி றந்தொளி
கா லயிலார் விழிமா மருகா
— விரைசெறியணிமார்பா

கனத்துயர் குன்றையு மிணைத்துள கும்பக
லசத்தையும் விஞ்சிய தனத்திசை மங்கை கொள்
கா தலனான் முகனா டமுதே

கமழ்ந்த குங்கும நரந்த முந்திமிர்
கரும்பெ னுஞ்சோலை யியம்பு குஞ்சரி
கா வலனே குகனே பரனே
— அமரர்கடொழுபாதா

உடுக்கிடை யின்பணி யடுக்குடை யுங்கன
வுரைப்புயர் மஞ்சுறு பதக்கமொ டம்பத
வோ வியநூ புரமோ திரமே

ருயர்ந்த தண்டொடை களுங்க ரங்களி
லுறும்ப சுந்தொடி களுங்கு யங்களி
லூ ரெழில்வா ரொடுநா சியிலே
— மினுமணி நகையோடே

உலப்பறி லம்பக மினுக்கிய செந்திரு
வுருப்பணி யும்பல தரித்தடர் பைந்தினை
யோ வலிலா வரணே செயுமா

றெழுங்கு றும்புன மிருந்து மஞ்சுல
முறைந்த கிஞ்சுக நறுஞ்சொ லென்றிட
வோ லமதே யிடுகா னவர்மா
— மகளெனுமொருமானாம்

மடக்கொடி முன்றலை விருப்புடன் வந்ததி
வனத்துறை குன்றவ ருறுப்பொடு நின்றிள
மா னினியே கனியே யினிநீ

வருந்து மென்றனை யணைந்து சந்தத்
மனங்கு ளிர்ந்திட விணங்கி வந்தரு
ளாய் மயிலே குயிலே யெழிலே
— மடவன நின்தேரார்

மடிக்கொரு வந்தன மடிக்கொரு வந்தனம்
வளைக்கொரு வந்தனம் விழிக்கொரு வந்தனம்

வா வெனுமோர் மொழியே சொலுநீ
மணங்கி ளர்ந்தந லுடம்பி லங்சிடு
மதங்கி யின்றுள மகிழ்ந்தி டும்படி
மான் மகளே யெனையா ணிதியே
— எனுமொழிபலநூறே

படித்தவ டன்கைகள் பிடித்துமு னஞ்சொன
படிக்குமண ணந்தரு ளளித்தவனந்தகிர்
பா கரனே வரனே யரனே

படர்ந்த செந்தமிழ் தினஞ்சொ லின்பொடு
பதங்கு ரங்குந ருளந்தெ ளிந்தருள்
பா வகியே சிகியூ ரிறையே

— திருமலிசமருரா

பவக்கட லென்பது கடக்கவு நின்றுணை
பலித்திட வும்பிழை செறுத்திட வுங்கலி
பா டவுநீ நடமா டவுமே
படர்ந்து தண்டையை நிதஞ்செ யும்படி
பணிந்த வென்றனை நினை துவந்துருள்
பா லனனே யெனையாள் சிவனே

வளரயின் முருகோனே

# 3. நெய்

தந்தந்தா தந்தந்தா தந்தந் தந்தன தந்தந்தா
தந்தந்தா தந்தந்தா தந்தந் தந்தன தந்தந்தா
தாந் தனா தனா தனா தனா

தனதன தத்தத் தனதன தத்தத்
தனதன தத்தத் தனதன தத்தத்தா
தனதன தத்தத் தனத்தனா
தனதன தத்தத் தனந்தனா

தனதன தத்தத் தனத்தனா
தனதன தத்தத் தனத்தனா
தனனா தனனா தனனா தனனா
தனனா தனனா தனனா தனனா

தனதன தனதன தனதன தனதன
தனதன தனதன தனதன தனனா—தந்தன தனதானா

வஞ்சஞ்சூ தொன்றும்பேர்
துன்பஞ் சங்கட மண்டும்பேர்
மங்கும்பேய் நம்பும்பேர்

துஞ்சும் புன்சொல்வ ழங்கும்பேர்
மான் கணார் பெணார் தமா லினான்

மதியது கெட்டுத் திரிபவர் தித்திப்
பெனமது துய்த்துச் சுழல்பவ ரிச்சித்தே
மனமுயி ருட்கச் சிதைத்துமே

நுகர்தின துக்கக் குணத்தினோர்
வசையுறு துட்டச் சினத்தினோர்
மடிசொல மெத்தச் சுறுக்குளோர்

வலியே றியகூ ரமுளோ ருதவார்
நடுவே துமிலா ரிழிவார் களவோர்
மணமல ரடியிணை விடுபவர் தமையினு
நணுகிட வெனைவிடு வதுசரி யிலையே
— தொண்டர்கள் பதிசேராய்

விஞ்சுங்கார் நஞ்சந்தா னுண்டுந்
திங்கள ணிந்துங்கால்
வெம்பும்போ தொண் செந்தாள்
கொண்டஞ் சஞ்சவு தைந்தும்பூ
மீன் பதா கையோன் மெய்வீ யுமா

விழியைவி ழித்துக் கடுகவெ ரித்துக்
கரியையு ரித்துத் தனுமிசை சுற்றிக்கோள்
விழைவறு சுத்தச் சிறப்பினார்
பிணைமழு சத்திக் கரத்தினார்

விஜயவு டுக்கைப் பிடித்துளார்
புரம்தெ ரிக்கச் சிரித்துளார்

விதிமா தவனா ரறியா வடிவோ
ரொருபா திபெணா யொளிர்வோர் சுசிநீள்
விடைதனி லிவர்பவர் புணபண மணிபவர்
கனைகழ லொலிதர நடமிடு பவர்சேய்
— என்றுள குருநாதா

தஞ்சஞ்சேர் சொந்தஞ்சா
லஞ்செம் பங்கய மஞ்சுங்கா
றந்தந்தா தந்தந்தா தந்தந் தந்தன தந்தந்தா
தாந் ததீ ததீ ததீ ததீ
ததிமிதி தத்தித் தரிகிட தத்தத்
திரிகிட தத்தத் தெயெனந டிக்கச்சூழ்
தனிநட னக்ருத் தியத்தினாண்
மகிடனை வெட்டிச் சிதைத்துளாள்
தடமிகு முக்கட் கயத்தினாள்
சுரதனு வக்கப் பகுத்துளாள்

சமிகூ விளமோ டறுகா ரணிவா
ளொருகோ டுடையோ னனையாய் வருவாள்
சதுமறை களும்வழி படவளர் பவண்மலை
மகளென வொருபெய ருடையவள் சுதனே
—அண்டர்கடொழுதேவா

பிஞ்சஞ்சூழ் மஞ்சொண்சே யுஞ்சந்
தங்கொள்ப தங்கங்கூர்
பிம்பம்போ லஞ்சஞ் சா ருங்கண்
கண்களி லங்குஞ்சீ
ரோங் கவே யுலா வுகால் விணோர்

பிரமனொ டெட்டுக் குலகிரி திக்குக்
கரியொடு துத்திப் படவர வுட்கப்பார்
பிளிற நடத்திக் களித்தவா
கிரிகெட வெக்கித் துளைத்தவா
பிரியக மெத்தத் தரித்தவா
தமியனை நச்சிச் சுளித்தவா

பிணமா முனமே யருள்வா யருள்வாய்
துனியா வையுநீ கடியாய் கடியாய்
பிசியொடு பலபிழை பொறுபொறு
பொறுபொறு
சததமு மறைவறு திருவடி தரவா
— என்களி முருகோனே

## 4. சருக்கரை

தான தந்தன தான தந்தன
தான தந்தன தான தந்தன
தான தந்தன தான தந்தன
தான தந்தன தான தந்தன

தத்தன தனதன தனத்தனா
தனந்த தத்தன தனத்தனா
தத்தன தனதன தனத்தனா
தனந்த தத்தன தனத்தனா
— தனதனதனதானா

மாத முந்தினம் வார முந்திதி
யோக மும்பல நாள்க ளும்படர்
மாதி ரந்திரி கோள்க ளுங்கழல்
பேணு மன்பர்கள் பானலந்தர

வற்சல மதுசெயு மருட்குணா
சிறந்த விற்பன ரக்கணா
மற்புய வசுரரை யொழித்தவா
வனந்த சித்துரு வெடுத்தவா

மால யன்சுரர் கோனு மும்பரெ
லாரும் வந்தன மேபு ரிந்திடு
வான வன்சுடர் வேல வன்குரு
ஞான கந்தபி ரானே னும்படி

மத்தக மிசைமுடி தரித்தவா
குளிர்ந்த கத்திகை பாத்றவா
மட்டறு மிகலயில் பிடித்தவா
சிவந்த வக்கினி நிதற்கணா

— சிவகுருவெனுநாதா

நாத விங்கித வேத மும்பல்பு
ராண மும்கலை யாக மங்களு
நாத னுன்றனி வாயில் வந்தன
வேயெ னுந்துணி பேயெ றிந்தபி

னச்சுவ திவணெது கணித்தையோ
செறிந்த ஷட்பகை கெடுத்துமே
னட்புடை யருளமிழ் துணிற்சதா
சிறந்த துத்தியை யளிக்குமே.

நாளு மின்புயர் தேனி னுஞ்சுவை
யீயும் விண்டல மேவ ருஞ்சுரர்
நாடி யுண்டிடு போஜ னந்தனி
லேயும் விஞ்சிடு மேக ரும்பொடு

நட்டமின் முப்பழ மூவர்க்குமே
விளைந்த சர்க்கரை கசக்குமே
நற்சுகி முற்றிய பயந்தொடே
கலத்த புத்தமு இனிக்குமோ
— அதையினியருளாயோ.

பூத லந்தனி லேயு நன்குடை
மீத லந்தனி லேயும் வண்டறு
பூம லர்ந்தவு னாத வம்பத
நேய மென்பது மேதி னந்திகழ்

பொற்புறு மழகது கொடுக்குமே
யுயர்ந்த மெய்ப்பெயர் புணர்த்துமே
பொய்த்திட வினைகளை யறுக்குமே
மிகுந்த சித்திகள் பெருக்குமே

பூர ணந்தரு மேநி ரம்பெழி
லாத னந்தரு மேய ணிந்திடு
பூட ணந்தரு மேயி கந்தனில்
வாழ்வ துந்தரு மேயு டம்பொடு

பொக்கறு புகழினை யளிக்குமே
பிறந்து செத்திட றொலைக்குமே
புத்தியி லறிவினை விளக்குமே
நிறைந்த முத்தியு மிசைக்குமே
—இதைநிதமுதவாயோ

சீத ளஞ்சொரி கோதில் பங்கய
மேம லர்ந்திடு வாவி தங்கிய
சீர டர்ந்தவி ராவி னன் குடி
யேர கம்பர பூத ரஞ்சிவ

சித்தரும் முனிவரும் வசித்தசோ
லையுந்தி ரைக்கட லடிக்கும்வாய்
செற்கண முலவிடு பொருப்பெலா
மிருந்தளி த்தருளயிற்கையா

தேனு றைந்திடு கான கந்தனின்
மானி ளஞ்சுதையாலி ருஞ்சரை
சேரு டம்புத ளாட வந்தசன்
யாச சுந்தர ரூப வம்பர

சிற்பர வெளிதனி னடிக்குமா
வகண்ட த்த்துவ பரத்துவா
செப்பரும் ரகசிய நிலைக்குளே
விளங்கு தற்பர திரித்துவா
— திருவளர் முருகோனே.

## 5. தேன்

தான தன தானான தான தன தான தன
தன தான தன தான தன தான தன தான
தன தன தன தானா

சூலதர னாராட வோதிமக ளாடநனி
தொழுபூத கணமாட வரியாட வயனோடு
தூய்கலை மாதாட மாநளினி யாடவுயர்
சுரரோடு சுரலோக பதியாட வெலியேறு
சூகைமுக னாராட மூரிமுக னாடவொரு
தொடர்ஞாளி மிசையூரு மழவாட வசுவீர
சூலிபதி தானாட நீலநம னாட நிறை
சுசிநார விறையாட வலிசானி ருதியாட
—அரிகர மகனோடே

காலிலியு மேயாட வாழ் நிதிய னாடமிகு
கனஞால மகளாட வரவேனி சசிதேவி
காமமத வேளோட மாமைரதி யாடவவிர்
கதிராட மதியாட மணிநாக வரசோகை
காணுமுனி வோராட மாணறமி னாடவிரு
கழலாட வழகாய தளையாட மணிமாசில்
கானமயில் தானாட ஞானவயி லாடவொளிரி
கரவாள மதுவாட வெறிசூல மழுவாட
—வயிரமலெறுழோடே

கோலவரை ஞானாட நூன்மருவ மாடவிரை
கொளுதீப வணியாட வுடையாட வடனீடு
கோழியய ராதாட வாவணி யாடமிளிர்
குழையாட வளையாட வுபயாறு கரமேசில்
கோகநத மாறாறொ டாறுவிழி யாடமலர்
குழகாய விதழாட வொளிராறு சிரமோடு
கூறுகலை நாவாட மூரலொளி யாடவலர்
குவடேறு புயமாட மிடறாட மடியாட
—அகன்முதுகுரமோடே,

நாலுமறை யேயாட மேனுதல்க ளாடவிய
னலியாத வெழிலாட வழிலாத குணமாட
நாகரிக மேமேவு வேடர்மக ளாடவரு
ணயவானை மகளாட முகவான முகனாட
நாரதம கானாட வோசைமுனி யாடவிற
னவவீரர் புதராட வொருகால டியனாட
ஞானவடி யாராட மாணவர்க ளாடவிதை
நவிறாச னுடனாட விதுவேளை யெணிவாகொள்
—அருண்மலிமுருகோனே.

பஞ்சாமிர்த வண்ணம் முற்றிற்று.

# அட்டாட்ட விக்கிரக லீலை

## நாற்பத் தெண்சீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

சந்திரசேகர மர்த்தநாரீ சுரஞ்
சக்கரப்பிரதானம்
தக்ஷிணமூர்த்தமிலிங்கம் லிங்கோற்பவத்
தக்ஷயக்கியபங்கம்
சந்தியி னிர்த்தனஞ் சத்தத நிர்த்தனஞ்
சண்டேசானுக்ரகம்
சலந்தரவதம கொராஸ்திரமேகப
தம்மசுவாருடம்
சத்யசதாசிவம் மிக்கசதாசிவந்
தகுலகுளேசுவரம்
சகஜசுகாசனங் கூர்ம சங்காரமச்
சாரிவராஹாரி
சற்குருமூர்த்தமுமேசமுமாபதி
ஜயபுஜங்கத்ராசம்
சார்த்தூ லஹரை ரவங்கலி யாணசுந்
தரம்வடுகங்கிராதம்.

சுந்தர விருஷப வூர்திவி ஷாபஹ
ரணஞ்சுவ ராபக்நம்
துகளறு க்ஷேத்திர பாலகந்தொல்கரு
டாந்திகம் முகலிங்கம்
துங்ககங் காதரங் கங்கா விஸர்ஜநஞ்
சுபசோ மாஸ்கந்தம்

சூரஸிம்ஹாரி[1] கமாரியமாந்தகஞ்
சுசி[2] மாணவபாவம்
சுபகர ப்ரார்த்தனை மூர்த்தந றுந்திரி
புராந்தகஞ் சுரர்பரசும்
சுமுகங் காளமி ரக்தபிக்ஷைப்பிர
தான மிருஞ்சுடரே

சுடர்கவ ரீவரப் பிரதம்ம ஹாபா
சுபதசோ ரூபமணி
தோன்றுபு ஜங்கல ளிதுர்ரிஷ பாந்திசுஞ்
தோமறுகஜயுத்தம்
விந்தைவீ ளம்புக ஜாந்திகம் வீணை
தயங்குதக்ஷிண மூர்த்தம்
மேதக யோகவி னோதமதாக
விளங்குதக்ஷிண மூர்த்தம்

விமலபி க்ஷாடணங் கவலையுத் தாரணம்
வேதக ணம்புகழும்
விதிசிர கண்டனங் கவுரிவிலாசமந்
விதமெழிலரியர்த்தம்
வீரபத் திரந்திரி மூர்த்திமுப் பாதம
ஹாவே தாளிநடம்
வெருவறு மேகப தத்திரி யுருவாய்
விளம்பறுபதுநான்கும்
விலாசவ ளிப்புநி மித்தமெ டுத்தவொர்
மெய்ப்பொரு ளெதுவ்துவே

---

1. காமாரி 'கமாரி' எனக் குறுகிற்று.
2. மாணவபாவம் = சிஷ்யபாவம்.

விண்ணவர் மண்ணவர் கண்ணவர் யாவரும்
வீடரு ளாயெனவே
வந்தனை புரியவி ருந்துள னீயென
வண்டமி ழான்மனசான்
வாழ்த்திவ ணங்கெனை யாளவெ னிருதய
மலரிலெ ழுந்தருளாய்

மந்திர நாயக தந்திர நாயக
மங்கள நாயக வோம்
மயதவ ரீசுரபரமகு ஹேசுர
வசனம னாதீத
வரதக்ரு பாகர குமரப ராபர
வரைவறு ஷாட்குண்ய

வஸ்துவெனற்புத சத்திய வித்தக
மரணமொ டயனமிலா
வானவ ஞானந போமணி யேதிரு
மாலய னறியாவோர்
மாமலை யின்பெய ரான்குரு நாதவென்
மருடெறு மாமுனியே

## அட்டாட்ட விக்கிர லீலை முற்றிற்று

இவ்விருகத்தினை யுள்ளுருக்கத்தோடு முப்போதும் பாடி யாடுக, ஆடாவிடினும் பாடுக, அங்ஙனஞ் செய்வார்க்கு உரோக நாசம், பாபநாசம், சத்துருநாசம், ஆயுள்விருத்தி தைரியவிருத்தி, வீரியவிருத்தி, புத்திரவிருத்தி, புண்ணிய விருத்தி யுண்டாதலோறி சர்வார்த்த சித்தியும், முத்தியும் வாய்க்குமென்பது வாய்மை.

உ

# முதல்வன் புராண முடிப்பு

சந்திர சேகரன் றழற்கண் ணேபொறி
வந்தன வாறவை மாசில் கங்கைசார்ந்
தைந்துட னொன்றனை குழவியாகியா
றந்தநன் மாதர்க ளமுத முண்டவே. 1

உண்டவை பலபல வுருவங் காட்டுபு
பண்டுமை யாலொரு படிவ மாயவள்
கண்டென வருத்தமு துண்டு காமர்செய்
அண்டவொண் கயிலைசென் றாடல் செய்யுமால். 2

ஆடலில் வெஞ்சுட ரசுவ மேறிய
தீடணை பம்புலி யிரத மூர்ந்தது
மூடமி விந்திரன் முதலி னோர்கரி
சேடண வூர்ந்தது செம்பொற் சேயரோ 3

செங்கரு டன்புலி சீய மோதிமஞ்
சங்குற ழேறுழை சரபம் யாடிவர்ந்
தெங்கணு மேகிய தெழில்கொ ளெந்நில
மங்கைய ரும்விழை மகிமைப் பிள்ளையே. 4

பிள்ளைமை நீத்தொரு பெருவ யோதிகம்
உள்ளவ னாய்ச்சுர ருலகை நன்குசெய்
உள்ளமொ டங்ஙன முலாவி னான்வன
நள்ளிட னடைந்துகின் னரஞ்செய் தானவன். 5

செய்யத னோசையிற் சேர்வி லங்குபுள்
மெய்யைம றந்தன வேய்ங்கு ழற்றொனி
ஐயனெ ழுப்பின னசுலுண் மாதர்கள்
மையல் செய் விரகமுள் வருந்த நாளுமே. 6

மேலட ரண்டமு மேய சேயவன்
மாலுடல் வரையிடை வந்து வானவர்
பாலுறு வலிகளைப் பாறச் செய்துதன்
வாலிருந் தைவத வடிவு காட்டினான். 7

காட்டலுஞ் சதமகன் கடவு ளேயெமை
வாட்டொரு சூரனை மடித்துக் காவெனக்
கேட்டவ னஞ்சன்மின் கிருபை செய்துமென்
றாட்டரன் பாற்படை யரசை வாங்கினான். 8

வாங்கிமற் கணத்தொடு மகிவந் தோதியும்
வீங்குமெய்க் கயமுகன் றனையும் வீட்டுபு
பாங்குடைச் சிங்கனும் பானு கோபனும்
நீங்கிடக் கண்டவர் நிருபற் கீண்டனன். 9

கீளவை பரிகொடி யாய்க்கி ளர்ந்தன
ஆளொரு வரையடைந் தருணை யான் புகழ்
வாளன கண்ணியை மணந்து விண்புரந்
தாளெயின் மான்மணந் தான்ச யம்புவே. 10

கந்தசஷ்டி மாவிரத பூசையிற் ''கந்த புராண'' படனஞ் செய்யவேண்டு மென்னும் நியதியுண்டு. அஞ்ஞான்று அது செய்தற்கியலாதார், இத் திருப்பத்தையே ஒருமுறை பக்தி யோடும் பாடி அப்படன புண்ணியத்தைப் பெறலாம் ஐயமின்று.

(பாம்பன் சுவாமிகள்)

பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள் அருளிய

# "குமாரஸ்தவம்"

## (விளக்கச் சிற்றுரை)

ஓம் ஷண்முக பதயே நமோ நம:
ஆறுமுகத் தலைவனுக்குப் போற்றி போற்றி
(போற்றி வணக்கம்)

" ஷண்மத பதயே நமோ நம:
ஆறுவகைச் சமயங்களின் தலைவனுக்கு வணக்கம்.

" ஷட்க்ரீவ பதயே நமோ நம:
ஆறு கழுத்துக்களையுடைய தலைவனுக்கு வணக்கம்

" ஷட்க்ரீட பதயே நமோ நம:
ஆறு கிரீடங்களை (முடிகளை) அணிந்துள்ள
தலைவனுக்கு வணக்கம்

" ஷட் கோண பதயே நமோ நம:
அறுகோண (சக்கரத்தில் எழுந்தருளியுள்ள)
தலைவனுக்கு வணக்கம்

" ஷட் கோச பதயே நமோ நம:
ஆறு தோத்திர நூல்களின் தலைவனுக்கு வணக்கம்

" நவநிதி பதயே நமோ நம:
ஒன்பது வகையான நிதிகளின் தலைவனுக்கு
வணக்கம்

" சுபநிதி பதயே நமோ நம:
பேரின்ப முக்தி நிலையத் தலைவனுக்கு
வணக்கம்

" நரபதி பதயே நமோ நம:
அரசர் தலைவனுக்கு வணக்கம்

" சுரபதி பதயே நமோ நம:

தேவராஜனான தேவேந்திரனுக்கும் மகாதேவ
னான சிவனாருக்கும் முறையே ஆட்சியும் உபதேசமும்
அளித்த அண்ணலான சுரபதிக்கு வணக்கம்

ஓம் **நடச் சிவபதயே நமோ நம:**
கூத்தப் பிரானான அறுமுகச் சிவனாருக்கு
வணக்கம்

" **ஷடக்ஷர பதயே நமோ நம**
ஆறெழுத்து இறைவனுக்கு அநேக வணக்கம்

" **கவிராஜ பதயே நமோ நம:**
கவிராஜ ராஜனாகிய தலைவனுக்கு வணக்கம்

" **தபராஜ பதயே நமோ நம:**
தவத்தினர்க்கு அரசான தலைவனுக்கு வணக்கம்

" **இகபர பதயே நமோ நம:**
இவ்வுலகத்திற்கும் மறுமையில்டையும் சுவர்க்கம்
முதலிய உலகத்திற்கும் தலைவனான குமரனுக்கு
வணக்கம்.

ஓம் **புகழ்முனி பதயே நமோ நம:**
திருப்புகழ் பாடிய முனிவராகிய அருணகிரி
நாதனுடைய தலைவனுக்கு வணக்கம்

" **ஜயஜய பதயே நமோ நம:**
வெற்றி மிக்க இறைவனுக்கு வணக்கம்

" **நயநய பதயே நமோ நம:**
மிக்க இனிமையைச் செய்யும்தலைவனுக்கு வணக்கம்

" **மஞ்சுள பதயே நமோ நம:**
அழகுருவான தலைவனுக்கு வணக்கம்

" **குஞ்சரி பதயே நமோ நம:**
தேவகுஞ்சரி என்னும் தெய்வயானை அம்மையின்
தலைவனுக்கு வணக்கம்

" **வல்லி பதயே நமோ நம:**
வள்ளியம்மை தலைவனுக்கு வணக்கம்

ஓம் மல்ல பதயே நமோ நம:
மல் போரில் வல்ல தலைவனுக்கு வணக்கம்
" அஸ்த்ர பதயே நமோ நம:
வேல் (முதலிய) தெய்வப் படைகளின் தலைவனுக்கு வணக்கம்
" சஸ்த்ர பதயே நமோ நம:
சஸ்திரங்கள் என்ற கைவிடாப் படைகளின் தலைவனுக்கு வணக்கம்
" சஷ்டி பதயே நமோ நம:
சஷ்டி திதியில் அமைந்த கந்தவிரத தலைவனுக்கு வணக்கம்
" இஷ்டி பதயே நமோ நம:
(வேள்வி) யாகத் தலைவனுக்கு வணக்கம்
" அபேத பதயே நமோ நம:
வேற்றுமையற்ற தலைவனுக்கு வணக்கம்
" சுபோத பதயே நமோ நம:
மெய்யுணர்வு அருளும் தலைவனுக்கு வணக்கம்
" வியூஹ பதயே நமோ நம:
(சேனைகளின்) அணிவகுப்புத் தலைவனுக்கு வணக்கம்
" மயூர பதயே நமோ நம:
மயூர நாதனுக்கு வணக்கம்
" பூத பதயே நமோ நம:
பூதங்களின் தலைவனுக்கு வணக்கம்
" வேத பதயே நமோ நம:
வேதநாதனுக்கு வணக்கம்
" புராண பதயே நமோ நம:
பழமையான (பிராணிங்களுக்குத்) தலைவனுக்கு வணக்கம்
" பிராணபதயே நமோ நம:
ஆன்மநாதனுக்கு வணக்கம்

**ஓம் பக்த பதயே நமோ நம:**

*அடியார்களின் தலைவனுக்கு வணக்கம்.*

" **முக்த பதயே நமோ நம.**

*பாச பந்தங்களினின்று விடுபட்டவர்களுடைய தலைவனுக்கு வணக்கம்*

" **அகார பதயே நமோநம:**

" **உகார பதயே நமோ நம.**

" **மகார பதயே நமோ நம:**

*மூலமந்த்ர மாகிய ஓம்'' என்ற பிரணவம் அகரம் உகரம் மகரம் என்று பிரியும் இம்மூன்று ஒளிகளும் முறையே ஆக்கல், காத்தல், அழித்தல் என்ற மூன்று தொழில்களையும் அவற்றைச் செய்யும் அயன், அரி, அரன் என்ற மும்மூர்த்திகளையும் உணர்த்தும் அந்த மும்மூர்த்தி களையும் அதிஷ்டித்துநிற்கும் முருகனே மூவர் தேவாதிகள் தம்பிரான் ஆவான் பிரணவ வாச்சியன் என்க.*

**ஓம் விகாச பதயே நமோ நம;**

*எங்கும் துன்றி நிறைந்த இறைவனான குகபதிக்கு வணக்கம்*

" **ஆதி பதயே நமோ நம:**

*எல்லாவற்றிற்கும் முதற் காரணமாகிய தலைவனுக்கு வணக்கம்*

" **பூதிபதயே நமோ நம**

*சகல ஐசுவரியங்களுக்கும் அண்டங்களுக்குமான் நாயகனுக்கு வணக்கம்.*

" **அமார பதயே நமோநம**

*மாரவேளை எரித்த மாதேவருக்குத் தலைவனுக்கு வணக்கம்*

" **குமார பதயே நமோ நம:**

*குமாரனாகிய பிரானுக்கு வணக்கம் குமாரபதி என்ற திரு நாமம்*

1. அஞ்ஞானத்தை அழிக்கும் மெய்ஞ்ஞான பண்டிதன்
2. கார்வேலை வென்ற கட்டழகன்
3. என்றும் அகலாத இளமைக்காரன்
4. வற்றாத செல்வம் வழங்கும் பிரான்
5. காமனை காய்ந்த கண்ணுதல் குமரன்
6. ஏழைக்கிரங்கும் பெருமான்
7, மூவர் தேவாதிகள் தம்பிரான், என்பன போன்ற பொருள் தருவதாகும். இவ்வித குணநலமுள்ள குமாரபதிக்கு வணக்கம் என்றதாம்; குமர நாமம் ஆறெழுத்து மந்திரமாக ஜெபிக்கத் தக்கது.

பாம்பனடிகள் பதமலர்க்கே அடைக்கலம்

"ஓம் குமாராய நம:"

'குமாரஸ்தவம் ஓர் ஆறெழுத்து மந்திர மறையாகும். இந்நூலில் முதல் ஆறு அடிகள் ஆறு என்ற எண் அமைய வருவது குறிப்பிடத்தக்கது. இதில் குமாரபிரானது திருமுகம், திருக்கைவேல், மயில், இரு தேவியர் முதலிய அனைத்தும் பேசப்படுவதால் இதனைப் பாராயணம் செய்வோர் குமாரப்பெருமானை இரு தேவியர்களோடும் மயில் மீது தரிசிக்கப் பெறுவர் என்பதும் குமாரப் பெருமான் திருவருளும் பாம்பனடிகள் குருவருளும் சகல செல்வ யோகமிக்க பெருவாழ்வையும் தந்தருளும் என்பதும் திண்ணம்.

# "கழுகுமலைபாதி கந்தகிரிபாதி"
## கலிவிருத்தம்
### தக்கராகம். - பண்-கொல்லிக்கௌவாணம்,

உலகவெம்மைக் கடல்கடக்கு முறுதியினைத் தாராய்
கலகமிகத் தவர்கருதுங் கழுகுமலை முருகா
விலகலற்ற விருந்தியெற்கு விரைவிலினி தளியாய்
பலகவிஞர் பரசுகந்த பருவதத்துப் பரமே (1)

வருதாவெல் லாங்கினைதி மனதினைப் போர்க்கும்
கருதார்க்குங் களிப்புதவுங் கழுகுமலை முருகா
ஒருதாழ்வுஞ் சொலவிசையா வுலப்பிலெனை வையாய்
கிருதார்த்த ருள்குகந்த கிரியிருக்குங் கிளியே (2)

அன்று சொன்ன படியெனைவந் தாண்டுகொள வேண்டும்
கன்றுதலில் லார்குரங்குங் கழுகுமலை முருகா
என்றுமெனைத் திருவடிக்க ணிருத்தியிட வேண்டும்
குன்றுதலில் லாதகந்த குவடமருங் குருந்தே (3)

தாட்டாம ரைத்திருவிற் றங்கவென்னை வையாய்
காட்டார்வ முனிவருள்குங் கழுகுமலை முருகா
வீட்டாசை யேற்கொளுதி விரைவினில்வல் லார்க்குள்
மாட்டார்க்கு நல்லகந்த மலையிருக்கு மணியே (4)

நாதநிலை ஞாங்கரெனை நன்கிருத்தி யாளாய்
காதலொடு நானேத்துங் கழுகுமலை முருகா
பாதகமெல் லாமுருக்கும் பரிவிலெனை வையாய்
மாதவர்கள் வணங்குகந்த மலையிருக்கு மணியே (5)

எள்ளுதலில் லாநெறியி லெனையிருத்தி யருளாய்
கள்ளுதலுள் ளார்மறத்த கழுகுமலை முருகா
துள்ளுதலில் லாதமதி துலங்க வெனக் களியாய்
பொள்ளுதல்கொள் ளாதகந்தப் பொருப்பிருக்கும்
பொருளே (6)

திடம்பிறங்கு தெருளிலெனைத் தினமுதனி வையாய்
கடம்புமலர் கமழ்வளங்கொள் கழுகுமலை முருகா
விடம்பொருவென் மலமவித்தன் விரையடியைத் தாராய்
தடம்பொழிக் கொள் கந்தகிரி தனிலிருக்குந் தகையே (7)

நான்பாடு பாட்டைநவில் பவர்க்குநல நல்காய்
கான்பாடு வண்டறையுங் கழுகுமலை முருகா
தேன்பாகு கண்டெனவந் தென்னுணணி சேராய்
மேன்பாடு மலருகந்த வெற்பிருக்கும் வேளே (8)

எனைத்தள்ளி னாலுமெனை நம்பினவர்த் தள்ளேல்
கனைத்தண்டை சிலம்பவருங் கழுகுமலை முருகா
தினைத்தனையு நீங்காத் திருவிலெனை வையாய்
நினைத்தவர நல்குகந்த கிரிக்கருணை நிதியே (9)

குருப்புகழர் விரும்புமருட் கூத்தினென்னை யாட்டாய்
கருப்புகழர் காணரிய கழுகுமலை முருகா
அருப்புகழர் நாடறிவி லனவரத மெனைவை
திருப்புகழர் புகழ்ந்தகந்த சிகரியுறை சிவமே (10)

## ஆறெழுத்துண்மை

அற்புத மாகிய வருமறை மொழிபோல்
வெற்புயர் புவனம்பல் விளங்கிடு மாறு
பற்பல தேவர்கள் படர்ந்தவிண் ணுறினும்
தற்பர மாவது சரவண பவவே.

பத்தியு ஞானமும் பரவிடு மார்க்கம்
எத்தனை யோவகை யிருக்கினு மிகத்தில்
முத்திதந் தனுதின முழுப்பல னல்கச்
சத்திய மாவது சரவண பவவே.

பூசிக்கும் வானவர் புரவல னாகி
வாசிக்கும் மாவடி வழிபடி னென்றும்
பாசத்தை நசித்தவண் பரப்பிரம வாழ்வைத்
தாசர்பங் காக்கிடுஞ் சரவண பவவே

அருணல முள்ளவ னாதிமுன் னுள்ளான்
பொருணல முள்ளவன் பூசித அடியார்க்
கிருணில மெய்தினு மிதமுட னேயத்
தருணத்திற் காப்பது சரவண பவவே.

பொடிபொலி மேனியன் பூரண வியோம
வடிவுடை யுயிலுடை யன்னடி கைகூப்
படியவர்க் கிடுக்கணிவ் வவனியிற் குறுகின்
சடிதியிற் றடுப்பது சரவண பவவே

மஞ்சிகைச் செவியோன் மயிற்பரி யூர்வோன்
தஞ்சமென் றவர்க்கரு டருசம ரூரான்
செஞ்சரண் வாழ்த்துநர் திருவடி சேர்வார்
சஞ்சலந் தவிர்ப்பது சரவண பவவே.

பொங்கிடு புனலிலம் பூவில்வெங் கனலில்
எங்கணு முளவெளி யில்வளி பகலிற்
கங்குலி லடியவர் கருத்துநன் கர்கச்
சங்கடந் தீர்ப்பது சரவண பவவே.

தென்றிசைக் கோன்விடு திரிவிதத் தூதர்
குன்றெனும் புயமலை குலுங்கமுக் குடுமி
வென்றிகொள் கடந்தடி வீசிவெம் பிடினும்
தன்றுணை யாவது சரவண பவவே.

தேவனுந் தேவியுந் திருவுரு வருவம்
மேவிய னாதியாய் மிளிர்தல்சண் முகமென்
றாவலுற் றுணர்பவ ரழிவுறா வண்ணஞ்
சாவினைத் தடுப்பது சரவண பவவே.

இந்திரன் முனிவாக ளேத்துபொற் சரணான்
செந்திரு நகரிடஞ் சேர்ந்ததில் வாழ
அந்திருப் புகழ்பா டினவருக் கபயம்
தந்ததைத் தருவது சரவண பவவே.

## நவவீரர்

## நவரத்தினக் கலிவிருத்தம்

### வீரவாகுதேவர் - மாணிக்கம்

சீர றாமுருக வேளுறை செழுமை
ஆர றாநிலய வாரியி லமரேண்
நார றாவுழுவ லேறிடு நலிவில்
வீர வாகுவெனும் வீரனை விழைவாம். (1)

### வீரகேசரிதேவர் - தரளம்

என்னை யாளிறை யாயுல கெங்கணும்
மன்னு கந்தபி ரான்மந்தி ரத்திடை
மின்னு வாழ்க்கைய றாவீர கேசரி
தன்னை யுள்ளன்பிற் றாழ்வர்க்கின் றூழலே. (2)

### வீரமகேந்திரதேவர் - புட்பராகம்

ஓதரும் வீரம கேந்திர னொருவன்
பாதமு ளேபடர் மாந்தர பரமீ
ஆதரம் வியம தாந்தரங் கருதுஞ்
சூதம காமர மீர்ந்ததோ மரவேள். (3)

### வீரமகேசதேவர் - கோமேதகம்

அரணத் திறையோ னையனா ரதமேன்
கரணத் தெனுவார் கலனூ றிடுவான்
முரணிற் பொருசூ ரனொடே முனைவோன்
சரணச் சுகவீ ரமகே சனரே. (4)

**வீரபுரந்தரதேவர் - வைடூரியம்**

திகையெலா நீக்கமி லாது செறிந்தபெருந்
திகையெலா மேற்றவிர் சாமி பதம்பரவாப்
பகையெலா நீக்கொரு பாடு பிறந்துளுவார்
மிகையெலாம் வீட்டிடும் வீர புரந்தரனே. (5)

**வீரராக்கத்தேவர்-வைரம்**

வீவயன மிலாமேல் வீட்டுநெறியை நேடும்
ஆவலறவர் வாழ்வா னாட்டுமுருக வேளின்
தாவிலருள்கொள் வீர ராக்கதனடி தாழ்வார்
தேவருமறி யாவோர் சீர்த்தியிலுயர் வாரால். (6)

**வீரமார்த்தாண்டதேவர்-மரகதம்**

தாமத மெற்றிடு மாசில் சார்ச்சேந்தன்
சேமவ டிக்களி யாமொர் சீர்ச்சார்ந்தோர்
மாமிடன் மிக்குடை வீர மார்த்தாண்டன்
பூமன நக்குநர் போதம் போய்க்காண்பார். (7)

**வீராந்தகதேவர்-பவளம்**

மள்ளலே றேண்சிகி யிவரு மஞ்சனை
உள்ளுவோ ரோங்கவ னுணர்வு சந்ததந்
கொள்ளுவீ ராந்தக னினைவு கொண்டிடின்
தள்ளுவார் காண்கணத் *தறுகண் யாவையும். (8)

**வீரதீரதேவர்-நீலம்**

ஆரெப்படி முனினும்மது போலத்திரு வருள்கூர்
நாரப்பெரு மானாயழ னாகப்பெய ரானாள்
தாரப்பொருள் வேலற்பணி தகைமைக்குண வீர
தீரப்பெய ரோனைப்புகழ் தெருளர்க்கிலை சிறுகே (9)

---

* தறுகண்-கடுகக் கொல்லுதல்; சிறுபாணாற்றுப்படை காண்

கந்த சஷ்டி முதலிய மாவிரத வழிபாடுகளில் வழுத்துமாறு
பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகளருளிச்செய்த
நவவீரர் நவரத்தினக்கலிவிருத்த முற்றிற்று.
கவிக்கொரு கர்ப்பூரதீபமேற்றுக.
குமரகுருபரன் திருவடி வாழ்க.

## பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள் வாழ்நாள் நிகழ்ச்சிக் குறிப்புகள்

ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள் அவதரித்த வருடம் கி.பி. 1850–1852 குறிப்பான ஆண்டு குறிக்கப்படவில்லை.

1) ஸ்ரீமத் சுவாமிகள் இராமேசுவரத்தில் கிறித்துவக் கல்விச் சாலையில் சேர்ந்தது. —கி.பி. 1866.

2) திருமணம் நிகழ்ந்தது. —கி.பி. 1878.

3) சுவாமிகளை, "யான் கூறும்வரையில் நீ பழநிக்கு வரவேண்டாம்" என்று முருகன் கட்டளையிட்டது. —கி.பி. 1891.

4) மகாமந்திர மலையான சண்முக கவசம் பாடியது. — கி.பி. 1891.

5) பரிபூஜன பஞ்சாமிர்த வண்ணம். பாடியது. — கி:பி. 1891.

6) திருத்தொடையல் பாடியது. — கி.பி. 1892.

7) திருவலங்கற்றிரட்டு முதற் கண்டம். பாடியது. — கி.பி. 1892.

8) தென் திசைத் திருத்தல யாத்திரை செய்தது — கி.பி. 1893.

9) திருவனந்தபுரத்தில் தங்கியிருந்து 22 தினங்கள் யாப்பிலக்கணம் படித்தது — கி.பி. 1893.

10) திருவலங்கற்றிரட்டு 2-ஆம் கண்டம் பல்சந்தப் பரிமளம் பாடியது. — கி.பி. 1893.

11) திருப் பிரப்பன் வலசை மயதன பூமியில் இருந்து தவம் தொடங்கியது. — 17-3-1894.

12) ஸ்ரீ அகத்தியர் - ஸ்ரீ அருணகிரிநாதர் இருவருடன் முருகப் பெருமாள் **நேரில் காட்சி தந்து** ஞானோபதேசம் செய்தது. — 23-3-1894.

13) 35-ஆம் நாளிரவு சித்திரைப் பௌர்ணமி தினம் தவத்தை முடித்து எழுந்தது. — 20-4-1894.

14) தூய துறவறம் மேற்கொண்டது. — கி.பி. 1893.

15) சென்னை நகரம் சேர்ந்தது. — கி.பி. 1893.

16) ர்ரிபூரணானந்த போதம் நூல் அருளியது. — கி.பி. 1896.

17) தகராலய ரகசியம் நூல் அருளியது. — கி.பி. 1896.

18) குடந்தை மகாமகம் தீர்த்தமாடச் சென்றது. — கி பி. 1898.

19) "திருப்பா" நூல் அருளிச்செய்தது. — கி.பி 1897.

20). அட்டாட்டவிக்கிரக லீலை நூல் அருளியது. — கி.பி. 1898.

21) திருவலங்கற்றிரட்டு முதல் கண்டம் அச்சிட்டது. — கி.பி. 1901.

22) திருவலங்கற்றிரட்டு இரண்டாம் கண்டம் அச்சிட்டது. — கி.பி. 1902.

23) காசி யாத்திரை தொடங்கியது. — கி.பி. 1902.

24) காசி யாத்திரை நூல் அருளியது. — கி.பி. 1902.

25) சிவயாதன வியாசம் அருளியது. — கி.பி. 1902.

26) சஷ்டி வகுப்பு அச்சிட்டது. — கி.பி. 1903.

27) வேதங்களைக் குறித்த வியாசம் அச்சிட்டது. — கி.பி. 1903.

28) இலங்கைப் புத்த மன்னன் புதல்வி ஊமைப் பெண்ணை ஸ்ரீ வாதவூரடிகள் பேசுவித்துப் புத்தரை வாதில் வென்ற திருத்தலமே பின்னத்தூர்த்தலம் எனும் "மாணிக்கவாசகேசுவரம்" என அறிவித்தது. — கி.பி. 1904.

29) "குமரவேல் பதிற்றுப் பத்தந்தாதி" அச்சிட்டது. — கி.பி. 1905.

30) "சிறுநூல் திரட்டு" அச்சிட்டது. — கி.பி. 1905.

31) "சேந்தன் செந்தமிழ்" நூல் அச்சிட்டது. — கி.பி 1906

32) சஷ்டி வகுப்புடன் "பத்துப் பிரபந்தம்" நூல் அச்சிட்டது. — கி.பி. 1907.

32) "நாலாயிரப் பிரபந்த விசாரம்" நூல் அச்சிட்டது. — கி.பி. 1908.

33) "நாலாயிரப் பிரபந்தவிசாரம்" வசன நூல் அச்சிட்டது. — கி,பி. 1908.

34) "சைவ சமய சாபம்" வசன நூல் அச்சிட்டது. — கி.பி. 1908.

35) பரிபூரணானந்த போதம் "சிவசூரியப் பிரகாசம்" எனும் உரையுடன் அச்சிட்டது. — கி,பி. 1914.

36) சென்னை இராயப்பேட்டை ஸ்ரீ பாலசுப்பிரமணிய பக்த ஜன சபை நிலையத்திற்கு அஸ்திவாரக் கல் நிறுவியது. — 31-1-1915.

37) தகராலய ர்கசியம் "சதானந்த சாகரம்" எனும் உரையுடன் அச்சிட்டது. — கி.பி. 1916.

38) "குமாரஸ்தவம் அருளிச்செய்தது. — கி.பி. 1918.

39) ஸ்ரீமத் அருணகிரிநாத சுவாமிகளின் குருபூஜையை உத்தராயணத்து ஆறாவது பௌர்ணமி தோறும் (ஆனி மாதம்)

நடத்தும்படி சீடர்களுக்குப்
போதித்தது —கி.பி. 1918.

40) ஸ்ரீ சண்முக சகஸ்ர நாமார்ச்சனை
அச்சிட்டது. —கி.பி. 19.9.

41) சென்னை-இராயப்பேட்டை
ஸ்ரீ பாலசுப்பிரமணிய பக்த ஜன
சபையில் ''சைவ மகிமை" எனும்
தலைப்பில் விரிவுரை ஆற்றியது. —17-2-1919.

42) "திருப்பா" நூல் "திட்பம்" எனும்
உரையுடன் அச்சிட்டது. —கி.பி 1921.

43) "ஸ்ரீமத் குமாரசுவாமியம்"
நூல் அருளியது. —கி.பி. 1921.

44) "சிவஞான தீபம்" வசன நூல்
அச்சிட்டது. —கி.பி 1922

45) "செக்கர்வேள் செம்மாப்பு
"செக்கர்வேள் இறுமாப்பு"
நூல் அருளியது. கி பி. 1923.

46) கால் முறிவு ஏற்பட்டு சென்னை அரசாங்க
பொது மருத்துவ மனையில் சேர்ந்தது. —27-12-1923.

47) ஸ்ரீமத் சுவாமிகள் கால் முறிவு
குறித்துத் திரு. சின்னச்சாமி சோதிடர்,
திரு. ஞானசேகர முதலியார்,
திரு. சிவசங்கரத் தம்பிரான் ஆகிய
மூவரும் சண்முக கவசம் ஓதத்
தொடங்கியது —28-12-1923.

48) பெரிய மருத்துவ மனையில்
வானளாவத் தோகையை விரித்து
இரண்டு மயில்கள் காட்சி அளித்தது — 7-1-1924.

49) "இன்னும் 15 தினங்களில் கால்
குணமாகும் அதுவரை மருத்துவ
மனையை விட்டு நீங்க வேண்டாம்"
என முருகப்பெருமான்
அசரீரியாய்த் திருவருள் பாலித்தது —7-1-1924.

50) கால் குணமாகி மருத்துவமனையை
விட்டுப் புறப்பட்டது —23-1-1924.

51) "அசோக சாலவாசம்" அருளியது —கி.பி. 1924

52) சென்னை நம்புலி அய்யர் தெருவில்
"மயூரவாகன சேவன விழா" முதன்
முதலில் தொடங்கியது —கி.பி. 1924.

53) "ஸ்ரீமத் குமார சுவாமியம்" நூல்
அச்சிட்டது —கி.பி. 1925.

54) ஸ்ரீ சுப்பிரமணிய வியாசம் வசன
நூல் அச்சிட்டது — கி.பி. 1925.

55) வில் சாசனம் எழுதிப் பதிவு
செய்தது —17-7-1926.

56) காடிசில் என்னும் வில் அனுபந்த
சாசனம் எழுதியது —19-12-1927.

57) பெங்களூரில் தங்கியிருந்தது —29-5-1928.

58) பெங்களூரிலிருந்து சென்னை திரும்பியது —15-7-1928.

59) சென்னை நம்புலி அய்யர் தெருவில் ஸ்ரீ ஜெகந்நாத முதலியார் இல்லத்தின் மேல் மாடியில் ஸ்ரீமத் சுவாமிகள் சுத்தாத்துவித சித்தாந்த முத்தி பெற்ற நாள் காலை 7-15 —30-5-1929

60) சென்னை மயூரபுரம் எனும் திருவான்மியூரில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியது —31-5-1929.

[சுப்ரமண்யோம்]

ஓம்

சிதம்பரம் பாம்பன் சுவாமிகள் மடத்துக் கவிவாணர்
ஆ ம நடராஜ முதலியார், மேற்படி மடத்து நிர்வாகஸ்தர்

கவி. கு. நயினாசாமி

இவர்களால் தொகுத்து பாடப் பெற்ற

# குருநாதன் துதி அமுது

சீரே வருக பலகலையிற் சிறந்தோய் வருக பவபந்தஞ்
சிதைத்தோய் வருக மதவழக்கிற் ஜெயித்தோய் வருக [திருவான்மி
யூரேகுடி கொண்டொளிருகின்ற வுயர் வோய் வருக பணி [பவர்க்கோர்
வுயிரே வருக யிடர்தவிக்கும் வுசிதா வருக பொன் பொழியும்
காரே வருக நவமணியின் கதிரே வருக நான் பெற்ற
கதியே வருக முதிர்ந்த சுவைக் கரும்பே வருக [சிதம்பரத்தில்
பாரேற்றிடு மெங் குகப் பெருமான் பதமே கரரே வருக [திருப்
பாம்பன் குமர குருதாசப் பரமே வருக வருகவே. (1)

திரமே வருக அருளமுதத் தேனே வருக கலைக்கடலின்
றெளிவே வருக வுமமையிலாத் தேவே வருக எமது [பெரும்
வரமே வருக சைவ சுப வரையே வருக அஞ்சாத
வள்ளால் வருக அடியர்குல வாழ்வே வருக சடை [மலிந்த
சிரமே வருக நீரணிந்த செம்மால் வருக திடகாத்ரச்
செல்வா வருக எமையாளும் சித்தே வருக தமிழ் மணக்கும்

பரமானந்த குகப் பெருமான் பதசே கரரே வருக திருப்
பாம்பன் குமர குருதாசப் பரமே வருக வருகவே. (2)

முத்தே வருக கவிபொழியும் முகிலே வருக ஒருகோடி
முனிவோர் பணியக் கொலுவமரும் முதியோய் வருக [சிவ யோகச்
சத்தே வருக யிணையில்லாச் சதிரோய் வருக கருணைமிகு
சான்றோய் வருக புறமதத்தின் சயமே வருக [திருமறையின்
வித்தா முருகன் காக்ஷிதர விளங்கும் சஷ்டித் திருப்பூசை
விபவமுடனே புரியும் வகை விரித்த துரையே வருக [அருட்
பத்தானந்த குகப் பெருமான் பதசேகரரே வருக திருப்
பாம்பன் குமர குருதாசப் பரமே வருக வருகவே. (3)

கண்ணேவருக விளையதனால் கழன்ற திருத்தாளென் [பதனைக்
கந்தன் பெயரால் பொருந்தி முன்போல் காண்பா [ருவக்கச் செய்தபெரும்
அண்ணுரல் ஆறாயிரத் தறுநூற் றறுபானாறு திருமந்தரம்
அடியேமுய்ய வருளிய மெய் யருள் மாதேஜோ மண்டலத்தார்
எண்ணே வருக வுயிர்க்குரிய எழுத்தே வருகஇயல் மதுர
இசையே வருக எமதிதயத்திருப்போய் வருக அருண [கிரிப்
பண்ணாற்றுதிக்கும் குகப்பெருமான் பதசேகரரே [வருகதிருப்
பாம்பன் குமர குருதாசப் பரமே வருக வருகவே. (4)

அச்சந் தவிர்ப்போய் அப்பாவு அய்யா அரசே அண்ணா
அன்பே இன்பே ஆரமுதே அருளானந்த வாரிதியே
[வேர்
கொச்சை மொழியால் பவமொழியக் குழறிக் குழறிக்
[களிப்புற்றேம்
கோவே வருக அருட்சோதிக் குன்றே வருக
(எண்ணியவா
றிச்சைப் படியே ஏமக்கருளும் இறைவா வருக வுமதுபத
யிதயநயினாசாமி தமிழ்க்(கு) எல்லாந் தருவோய்
[வருகஜெய
பச்சை மயிலூர் குகப்பெருமான் பதசேகரரே வருக திருப்
பாம்பன் குமர குருதாசப் பரமே வருக வருகவே. (5)



கவி அரசு ஆ.ம. நடராஜ முதலியார் இயற்றிய

## பாம்பனடிகள் சரண மலர் 108

| | | | |
|---|---|---|---|
| திருவருள் | வேலவன் | சேயா | சரணம் |
| தருவளர் | பாம்பன் | தலத்தோய் | ,, |
| செங்கம | லத்தில் | செனித்தோய் | ,, |
| தங்கசாத் | தப்பர் | தனயா | ,, |
| அப்பாவு | நாமத் | ததிபா | ,, |
| எப்பாரும் | ஏற்றும் | இருடியே | ,, |
| கலைமுனி | யாண்டிபால் | கற்றோய் | ,, |
| புலைகொலை | நீத்த | புனிதா | ,, |
| திவ்விய | ஞானத் | திறலோய் | ,, |
| செவ்வேள் | அருளிய | செல்வா | ,, |
| சிவசிவ | மந்த்ரம் | ஜெபித்தோய் | ,, |
| தவசியர் | போற்றிடும் | தாதா | ,, |
| உண்மைக் | குவக்கும் | உசிதா | ,, |
| வெண்ணீ | றணியும் | விபவா | ,, |

| | | | |
|---|---|---|---|
| சஷ்டி | கவசத் | தியானா | சரணம் |
| இஷ்ட | கவிகள் | இசைத்தோய் | ,, |
| முருகனைப் | பாட | முயன்றோய் | ,, |
| அருண | கிரிப்பேர் | அமைத்தோய் | ,, |
| அறிஞர்கள் | ஏற்றும் | அருளா | ,, |
| நெறிகுகன் | நேர்மை | நிதியே | ,, |
| காளிமுத் | தம்மை | கணவா | ,, |
| வேலின் | பதத்தில் | விருப்புளோய் | ,, |
| பன்னூல் | வரைந்த | பரனே | ,, |
| சின்னூல் | வியாஸமாய்ச் | செய்தோய் | ,, |
| ஒருதெய் | வவழிக் | குழைத்தோய் | ,, |
| கருதுவார்க் | கின்பருள் | கண்ணே | ,, |
| சேதுமா | தவிர்மொழித் | தேர்ந்தோய் | ,, |
| தீதனு | காதருட் | செய்தோய் | ,, |
| சாதிபே | தத்தை | தடிந்தோய் | ,, |
| நீதிபோ | திக்கும் | நிமலா | |
| குமர | குருதாச | குருவே | ,, |
| எமதுயிர் | குற்ற | இறைவா | ,, |
| உண்மை | வடிவத் | துடையாய் | ,, |
| பண்பல | பாடிய | பாவலோய் | ,, |
| சைவசித் | தாந்த | சதுரா | ,, |
| தெய்வவை | தீகத் | தெளிவே | ,, |
| சுடலையில் | யோகுசெய் | சுத்தா | ,, |
| திடமார் | அழகிய | தேகா | ,, |
| அத்யாஸ் | ரமத்தை | யடைந்தோய் | ,, |
| வித்யா | வடிவ | விபவா | ,, |
| நித்யா | னந்த | நிலையே | ,, |
| சுத்தா | னந்த | சுகிர்தா | ,, |
| சகடசோ | திப்பும் | சகித்தோய் | ,, |
| திகடரும் | ஊழை | செயித்தோய் | ,, |
| விதிசக | டத்தை | விழைத்தோய் | ,, |

| | | | |
|---|---|---|---|
| கதிர்வேல் | இணைத்த | கழலோய் | சரணம் |
| தமிழுக் | குயிரது | தந்தோய் | ,, |
| யமிகட் | கிறையே | யதீந்த்ரா | ,, |
| மயில்வா | கனசே | வனரே | ,, |
| அயிற்சே | வடிக்கோர் | அன்பா | ,, |
| மாதேஜோ | மண்டல | வள்ளால் | ,, |
| ஓதா | துணர்ந்த | உசிதா | ,, |
| பேதமில் | லாத | பெரியோய் | ,, |
| வாதிடும் | பேய்களை | மாய்த்தோய் | ,, |
| உப்பிலா | வமுதினை | யுண்டோய் | ,, |
| ஒப்பிலா | மணியே | உனதா | ,, |
| மெய்ஞ்ஞான | பானுவே | மேலோய் | ,, |
| அஞ்ஞானந் | தீர்த்தெனை | யாண்டாய் | ,, |
| வேதவே | தாந்தம் | விரித்தோய் | சரணம் |
| மாதவர் | துதிக்கும் | மஹிபா | ,, |
| சென்னையில் | தங்கிய | தேவே | ,, |
| பின்னையில் | வதிந்த | பெருமா | ,, |
| சின்னசா | மிக்குயிர்ச் | செம்மலே | ,, |
| மன்னர்சம் | பந்தவேள் | வாழ்வே | ,, |
| ஜெகநாதர் | இல்லந் | திளைத்தோய் | ,, |
| சுகநாத் | தத்துவச் | சுதந்திரா | ,, |
| சட்டியை | நடத்தும் | சமர்த்தோய் | ,, |
| சிட்டரை | யாளுந் | திறத்தோய் | ,, |
| தற்புகழ் | விரும்பிடாத் | தந்தாய் | ,, |
| விற்பன | மிக்க | விநோதா | ,, |
| தில்லையில் | இருந்த | திவியா | ,, |
| நல்லவர் | ஏற்றிடும் | ஞாதா | ,, |
| சண்முக | கவசம் | சாற்றினோய் | ,, |
| விண்முகத் | தும்பர் | விரும்புவோய் | ,, |
| பஞ்சா | மிருதவண்ணம் | பாடினோய் | ,, |
| தஞ்சமென் | றோதமைத் | தாங்குவோய் | ,, |

சுத்தாத் துவிதச் சுடரே சரணம்
பத்தர்க் கருளும் பரமா ”
சடைமுடி கொண்டமெய்ச் சான்றோய் ”
விடையவன் செய்தாள் மேவினோய் ”
இகழ்வையும் இன்பமாய் ஏற்பாய் ”
புகழ்குக னோடு புசித்தோய் ”
சிவன்போல் விடமுணும் தீரா
தவவடி வாய்மிளிர் சாமி ”
தலம்பல சுற்றிய தகையோய் ”
திலம்பொலம் விழையா நிருபா ”
மிகையன்பு கொண்டொளிர்வித்தகா ”
பகையென்ப தறியாப் பதியே ”
மயான நிட்டையில் மகிழ்வோய் ”
தயான குணமிகு தற்பரா ”
வாணற் கிலக்கணம் வகுத்தோய் ”
மாணுற் றிலங்கும் மசனியோய் ”
பாலம்மை யன்பிற் பதிந்தோய் ”
வேலர்பால் சடக்கரம் வேண்டினோய் ”
வாழ்வுதந் தெம்மையாள் வானவா ”
ஊழ்தவிர்த் தினிதுசெய் யுத்தமா ”
சிவலிங்க சுவாமிகள் ஜீவனே ”
கவலிங்க நேராமல் கார்ப்பவா ”
நயினா சுவாமியின் நாயாகமே ”
இயல்நட ராஜனின் இதயமே ”
தீதண்டா தெம்மையாள் தெய்வமே ”
கோதண்ட பாணியின் குருபர ”
இடர்தவிர் தாளும் எந்தாய் ”
கடலரு கமர்ந்த கனியே ”
குருவா யமைந்தொளிர் கோவே ”
திருவான் மியூரில் திகழ்வோய் ”
அருள்க் அருள்களண் அண்ணலே ”
மருள்நீக்கி யாளும்நின் மலரடிச் சரணே.

# பிழை பொறுக்க முறையீடு

முத்தரின் முதல்வா முதுமொழித் தலைவா
முட்டிலா வனப்பது பொதுளும்
சித்திரவடிவே திகழருங் குழகா
செங்கையி னன்கயி லுடையாய்
மத்தமு கமழிலா யறுகும்வில் லுவமு
மதலையு மணிபதர் மழவா
பித்தனேன் குறைதீர்த் தருள்சிவ னேயென்
பிழைபொறுத் தாள்வதுன் கடனே.



# குமரகுருதாச சற்குரு மணிமாலை

கலைமாமணி ஆ.க. முத்துக்குமாரசாமி

(கட்டளைக் கலித்துறை)

சேது பதிதனிற் செங்கம லத்தாய், திருவருட்சீர்
ஓதுசாத் தப்பர் இவர்கள் மகனாய் உதித்துவந்தே
ஆதி முதல்வன் அரன்சேய் தனைத்தொழும் அன்ப! பாம்பன்
கோதில் குமர குருதாச! எம்சற் குருமணியே! (1)

மணமே மிகுந்த கடம்பணி வேலின் மயிலிறையைப்
பணிமா முனிவர் அருண கிரிசெலும் பாங்கினிலே
கணமும் விலகா தருள்வளம் சாற்றும் கவிபடைத்த
குணமார் குமர குருதாச! எம்சற் குருமணியே! (2)

வேலைப் பிடித்தவன், அன்பர்க் குதவி விளங்குகுகன்
காலைப் பிடித்துயர் வெல்லும் திருப்பாற் கடலமுதே
ஞாலத் தினர்கொளும் உப்பு புளிதவிர் நல்லதவக்
கோலக் குமர குருதாச! எம்சற் குருமணியே! (3)

பூவி லயனும் திருமாலும் ஈசனும் போற்றுகின்ற
பாவின் தலைவன் இசைதரு வேன்மையிற் பாலகன்மேல்
நாவிற் கனிகலப் பண்முறைப் பாடல் நலமுரைத்த
கோவிற் குமர குருதாச! எம்சற் குருமணியே! (4)

வானோர் பணியும் வடிவேற் பரனை மனதிலெண்ணி
ஊனே உருகப் பெருந்தவம் செய்துநல் உண்மைகண்டு
தேனா யினிக்கும் *இரக சியநூல் தெளிந்துரைத்த
கோனே குமர குருதாச! எம்சற் குருமணியே! (5)

இன்றே எனக்குன் செழுந்தேன் மலர்த்தா ளிணைதருவாய்
முன்றேர் மொழியுடன் பாலும் கலந்து முருகனுடன்
அன்றோர் கனவில் அடிசில் அருந்தும் அருங்குணச்சீர்க்
குன்றே குமர குருதாச! எம்சற் குருமணியே (6)

மறையே புகழும் சிவபெரு மானையும் மற்றவனை
மறவா அடியார் தமையும் பழித்திடு வம்பர்மீது
முறையாய்த் தொடரும் வழக்கா லவரை யொடுங்கவைத்த
குறைதீர் குமர குருதாச! எம்சற் குருமணியே! (7)

செய்யும் பணிகள் திருந்தவே செய்து திகழ்ந்தஐயா!
உய்யும் நெறிபெற் றுயர இருமொழி யோர்ந்தமெய்யா!
தெய்வ நலந்தரும் துய்யா! தொடர்ந்திடும் தீவினைகள்
கொய்யும் குமர குருதாச! எம்சற் குருமணியே! (8)

வண்டு சுவைதொடை பாவணி தோளன் மயூரனையே
கண்டு கனவில் நனவில் தரிசித்த கற்பகமே
பண்டு முறிந்தம் முருகன் பொருத்தும் பதமலரே
கொண்ட குமர குருதாச எம்சற் குருமணியே! (9)

---

* தகராலய ரகசியம்

அடுத்தே வருபவர் யாவரும் காண அருட்கவிகள்
படித்தே பலதலம் சுற்றித் திரிந்து பயனளித்தாய்
மடுத்தே நயனுறப் பேருரை தன்னை மனங்குளிரக்
கொடுத்தாள் குமர குருதாச! எம்சற் குருமணியே! (10)

தேறார் கொடுமையைத் தேவர் குழாத்தினர் செப்பவன்று
மாறாக் கருணையாற் காத்த குகன்றனை வாழ்த்திநின்றே
ஆறா யிரத்தறு நூற்றறு பத்தா றருங்கவிகள்
கூறாக் குமர குருதாச! எம்சற் குருமணியே! (11)

கடியார் கடம்பணி திண்டோட் பரமன், கழலையென்னும்
அடியார் மனத்தி லகலா தொளிர்பவன். ஆறுமுகன்,
வடிவேற் குழகன் அடிநிழ லெய்தியே வான்மியூரில்
குடிகொள் குமர குருதாச! எம்சற் குருமணியே! (12)



## குமரகுருதாச குருமணியே

இராகம்:- சண்முகப்பிரியை தாளம்:- ஆதி

பல்லவி

குமரகுருதாச குருமணியே என்றும்
குணமுறப் பணிவோம்நின் துணையடி இணையே குமர

அனுபல்லவி

அமைமுதல்வன் குகனே அறிந்திடுக என்றே
அழகுரையால் அன்பரை ஆளும் குணக்குன்றே குமர

சரணம்

ஆறாயிரத் தறுநூற் றறுபத்தாறு கவியே
அறிந்திடச் செய்தெமை ஆளாக் குவையே
மாறுதல் இல்லாத மழையாய் உலகிலே
வாழும் அருட்கவி வழங்கிய முகிலே குமர

# பாம்பன் அடிகள்

திணை:-பாடாண்திணை துறை:-செவியறிவுறூவு

அருண கிரியார் அடிச்சுவடு பற்றி
அருள்வளம் பொருந்தும் அருங்கவி புனைந்தார்
உலகினர் விரும்பியுண் உப்பு புளிதவர்த்து
அலகில் சிவதொண் டாற்றிச் சிறந்தார்
ஒருகைய் வவழிக் குழக்தே சிற்சில
திருவளர் வியாசமும் செய்தார் மகிழ்வுடன்
கொக்கரக் கோவெனுங் குக்குடக் கூவலைத்
தக்கநற் றமிழெனச் சான்றுடன் விளக்கினார்
துறவறம் பூண்டுசெந் துறைநடந் தரிய
கறையிலா வாழ்வினைக் கருதியே யுற்றார்
சந்தமார் சிவனையும் தகுமடி யாரையும்
நிந்தனை செய்யும் நிருதரைச் சாடி
நீதி மன்றத்தில் நிகழ்த்திய வழக்கால்
ஓதுநூ லிரண்டால் ஒடுங்கிடச் செய்தார்
அமிழ்தின மினிதென அறிஞர் புகழ்தனித்
*தமிழ்நூ லொன்றும் நாரணிக் குதவினார்
கமழும் கடம்பணி கார்த்திகை மைந்தன்
குமரன் கூட்டுகால் குறிதனைப் பெற்றார்
ஆற்றல் மிக்க ஆறா யிரத்தறு
நூற்றறு பத்தாறு நுண்கவி பகர்ந்த
குமர குருதாசக் கோனென விளங்கி
அமரரும் புகழ்திரு வான்மியூர் மேவினார்
படர்நீ றணியுமிப் பாம்பன் அடிகள்
அடிமலர் பணிந்தே அருள்பெறு வோமே

---

* சேந்தன் செந்தமிழ்

உ

# ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள்

# அஷ்டோத்தர போற்றித் திருவகவல்

செங்கம லம்தரும் செல்வமே போற்றி
அங்குக வாண்வர்க் கடியவ போற்றி
மாசாத் தப்பரின் மைந்தரே போற்றி
தேசோ மண்டலத் திலகமே போற்றி
சேதுவிற் றோன்றிய தேவே போற்றி
நாத முதல்வனை நாடினோய் போற்றி
பாம்பனில் வளர்ந்தளி பழமே யோற்றி
தீம்பயிர்க் கதிரெனத் திகழ்வோய் போற்றி
செந்தமிழ் விளக்கிச் சிறந்தோய் போற்றி
எந்தவப் பயனாம் இறையே போற்றி
அருளோ டறிவும் அடைந்தோய் போற்றி
பொருளே யறியப் புகட்டினோய் பேயற்றி

| | | | |
|---|---|---|---|
| ஐயந் | தவிர்த்திடும் | ஆற்றலோய் | போற்றி |
| உய்யுந் | திறன்தரும் | உரவோய் | போற்றி |
| சண்முக | கவசம் | தந்தோய் | போற்றி |
| ஒண்முக | வேலவர்க் | குரியோய் | போற்றி |
| ஐயமு | தப்பயன் | அளித்தோய் | போற்றி |
| செய்வன | திருந்தச் | செய்தோய் | போற்றி |
| திருவலங் | கல்நூல் | திரட்டினோய் | போற்றி |
| பொருள் | விளக்கிடுமா | புனிதா | போற்றி |
| பூரணா | னந்த | பேர்தா | போற்றி |
| ஆரண | மாகம | ம்ளந்தோய் | போற்றி |
| திருப்பா | வளித்த | செம்மையோய் | போற்றி |
| விருப்புறத் | திட்பம் | விளக்கினோய் | போற்றி |
| ஞான | வாக்கியம் | நல்கினோய் | போற்றி |
| மோன | மீதென | மொழிந்தோய் | போற்றி |
| தகரநுண் | வித்தை | சாற்றினோய் | போற்றி |
| மிகநுண் | பொருளை | விரிந்தோய் | போற்றி |
| வேத | வியாசம் | விளம்பினோய் | போற்றி |
| கீத | முடிவதன் | கேண்மையோய் | போற்றி |
| சேந்தன் | செந்தமிழ் | செய்தோய் | போற்றி |
| ஆந்தமிழ் | தேவனுக் | காக்கினோய் | போற்றி |
| பண்ணுறும் | பாடல்கள் | பகர்ந்தோய் | போற்றி |
| திண்மை | முருகுரை | தெளிந்தோய் | போற்றி |
| சித்திரக் | கவிநனி | செய்தோய் | போற்றி |
| முத்திகொள் | முடிவதை | மொழிந்தோய் | போற்றி |
| அந்தாதி | பத்துபத் | தருளினோய் | போற்றி |
| எந்தைதா | யெனவுவந் | திருப்போய் | போற்றி |
| சுத்தாத் | துவைதம் | துலக்கினோய் | போற்றி |
| சித்தமே | நிலைதரும் | செயலுளோய் | போற்றி |
| ஒலியலந் | தாதி | ஓதினோய் | போற்றி |
| நிலையுணர்ந் | துரைசெயும் | நேர்மையோய் | போற்றி |
| சிவஞான | தீபம் | செப்பினோய் | போற்றி |

அவஞானம் நீக்கிய ஆரிய போற்றி
குமார சுவாமியம் குயிற்றினோய் போற்றி
குமாரன் கூட்டுகால் குறியோய் போற்றி
விருப்பும் வெறுப்பும் விட்டோய் போற்றி
நெருப்பென முதல்வனை நினைந்தோய் போற்றி
நடுநிலை யேத்தும் நளினமே போற்றி
திடநிலை மொழியினைத் தெரிந்தோய் போற்றி
நிலைத்த புகழின் நேர்மையோய் போற்றி
அலைத்த நூற்காணிநூல் ஆக்கினோய் போற்றி
புத்தி திருத்துநூற் புலவோய் போற்றி
அத்தன் அறுமுகற் கன்பா போற்றி
கடலே யெனுந்திறக் கலைஞ போற்றி
மடைமை யொழித்திடும் மதியோய் போற்றி
மாதிறத் தோர்தொழும் வளப்போய் போற்றி
தீதறச் செய்தவச் செழிப்போய் போற்றி
கருத்தன் கருத்துள கரும்பே போற்றி
திருத்தி வடித்தநற் றேனே போற்றி
கந்தனை நனவிலுங் கண்டோய் போற்றி
பிந்தியும் கனவினிற் பேசினோய் போற்றி
முகிலே எனக்கவி மொழிவோய் போற்றி
பகலா யொளிர்திருப் பாவோய் போற்றி
அற்புதம் ஆர்வர லாற்றவ போற்றி
பற்பல நூல்களும் பயின்றோய் போற்றி
குலங்கரு தாதருட் கொடுத்தோய் போற்றி
நலங்கருத் தோர்ந்தவர் நட்பே போற்றி
அயன்மன மடக்கியோர்க் கமுதே போற்றி
நயந்தரு குகேசனை நம்பினோய் போற்றி
வெண்ணீ றணிந்து விளங்குவோய் போற்றி
மண்ணவர் நடைகொளா மாண்போய் போற்றி

| | | | |
|---|---|---|---|
| களங்கத் | தருமுரை | களைத்தோய் | போற்றி |
| விளங்குங் | குமரனை | விரும்பினோய் | போற்றி |
| முனியை | முருகெனு | முதல்வா | போற்றி |
| கனிய | உரைசெயுங் | கருத்தோய் | போற்றி |
| பொய்யினைக் | கடிந்த | புனிதா | போற்றி |
| மெய்யதை | யடைந்த | மேலோய் | போற்றி |
| உப்பு | புளியொழித் | துண்டோய் | போற்றி |
| செப்பரு | மறைமுதல் | தேர்ந்தோய் | போற்றி |
| இயற்கை | ஆயும் | இயல்போய் | போற்றி |
| மயிற்றே | வனைப்புகழ் | வாயோய் | போற்றி |
| பிரப்பன் | வலசைப் | பெருந்தவ | போற்றி |
| உரப்பெருங் | கல்வி | யுடையோய் | போற்றி |
| முற்றுந் | துறந்த | முனியே | போற்றி |
| பற்றுசெவ் | வேளெனப் | பாடினோய் | போற்றி |
| ஆருயிர்க் | கன்புசெய் | அழகோய் | போற்றி |
| ஒருயிர்க் | கடமையை | உணர்த்தினோய் | போற்றி |
| கந்தசட் | டியின் பயன் | கண்டோய் | போற்றி |
| புந்திகொள் | சிவனிராப் | பூசையோய் | போற்றி |
| சைவம் | வளர்த்த | தகைமையோய் | போற்றி |
| மெய்ம்மை | இலங்கிட | விழைந்தோய் | போற்றி |
| மயில்நடங் | கண்டு | வணங்கினோய் | போற்றி |
| அயில்தொடர் | அடியுடை | ஆட்சியோய் | போற்றி |
| சங்கரன் | செய்பதந் | தடவினோய் | போற்றி |
| மங்குத | லற்றசொன் | மகிமையோய் | போற்டு |
| செக்கர்வேள் | செம்மாப்பு | செப்பினோய் | போற்றி |
| பக்க | மிறுமாப்பு | பகர்ந்தனை | போஇறி |
| செவ்வேட் | பரமனின் | சிந்தையோய் | போற்றி |
| அவ்வேள் | திருவடி | யடைந்தனை | போற்றி |
| ஒருவான் | மயூரனுக் | குகந்தோய் | போற்றி |
| திருவான்மி | யூர்தனைச் | சேர்ந்தோய் | போற்றி |

| | | | |
|---|---|---|---|
| அருணையின் | முனியெனு | மான்றோய் | போற்றி |
| கருணையோ | டவன்பெயர் | காப்போய் | போற்றி |
| அமரரும் | புகழ்திரு | வானோய் | போற்றி |
| குமரகுருதாச | குருவே | போற்றி | |
| போற்றி | போற்றிநின் | பொற்கழல் | போற்றி |
| போற்றி | போற்றி | போற்றி | போற்றியே. |

ஸ்ரீ குமர குருதாசப் பெருமான் திருவடிகள் வாழ்க.



திருச்சிற்றம்பலம்

ஓம் குமர குருவே சரணம் ஐயா

# ஆற்றுப்படையில் அறிவியல்

தமிழன் அறிவியல் போன்ற பிற துறைகளில் வறியவனாக இருக்கலாம், ஆனால் ஆன்மீகத்தில் அவனே மிகப் பெரியவன். மேலைநாடுகளின் அறிவார்ந்த மக்களை ஈர்க்கின்ற ஆன்மீகச் சிந்தனையாளர்களும், மகான்களும், ஞானிகளும், சித்த புருடர்களும் இந்தப் புண்ணிய பூமியில் தோன்றிப் புனிதப்படுத்தியுள்ளனர். ஸ்ரீலஸ்ரீ பாம்பன் குமரகுருதாஸ சுவாமிகளைப் போன்றவர்களால் இத் தமிழகம் ஆன்மீகத்தில் தலை நிமிர்ந்து நிற்கின்றது.

இக்கட்டுரையின் தொடக்கத்தில் தமிழன் அறிவியல் போன்ற துறைகளில் வறியவனாக இருக்கலாம் என்ற தொடர் காணப்பெறுகிறது. இது மிகப் பழைய வாதம், சங்க நூல்களையும் ஏனைய பக்தி இலக்கியங்களையும் ஆழ்ந்து நோக்கும் போது தமிழன் ஒன்றும் அவ்வளவு தாழ்ந்து விடவில்லை என்றே எண்ணத் தோன்றுகிறது. தமிழன் அறிவியல் துறையிலும் பணக்காரனாகவே இருந்திருக்கின்றான்.

சங்க இலக்கியத் தொகுப்பாகிய பத்துப்பாட்டின் முதற்பாட்டு திருமுருகாற்றுப்படை. இந்நூல் சைவத்திரு முறைகளிலும் இடம் பெற்றுள்ளது, பத்துப்பாட்டு, பன்னிரு திருமுறை எனும் இரண்டு தொகுப்புக்களிலும் இடம் பெறும் கௌரவம் திருமுருகாற்றுப் படைக்குக் கிடைத்திருக்கின்றது. பக்தி செய் அடியவர்க்குப் பரம் பொருளாகிய செவ்வேட்பரமனைக் காட்டுவதாலும், தமிழ் நெறி நாவலர்க்குத் தெய்வ நலங்கமழும் இன்தமிழ் அமுதத்தை ஊட்டுவதாலும் இந்நூல் இரண்டு தொகுப்புக் களிலும் இடம் பெற்றது போலும்.

**ஆற்றுப்படை அறிவியல்:-**

இத் திருமுருகாற்றுப்படை, அறிவியல் விற்பன்னர்களே மூக்கின் மேல் விரல் வைத்து ஆச்சரியப் படத்தக்க ஒரு அரிய விஞ்ஞானச் செய்தியைப் போகிற போக்கில் சுட்டிச் செல்கின்றது.

**ஓசோன்:**

சூரிய வெப்பம் பூமியில் உள்ள உயிர்களால் தாங்க முடியாத அளவுக்குக் கடுமையானது. ஆகாயத்துப் பால் வீதியில் (Milkey Way) "ஓசோன்" என்று ஒரு படலம் உள்ளது இப்படலம் சூரிய வெப்பத்தை வாங்கி, பூமியில் உள்ள உயிர்கட்கு எந்த அளவிற்கு வெப்பம் தேவையோ அந்த அளவு வெப்பத்தை நெறிமுறைப்படுத்தி வழங்கு கின்றது அதனால்தான் உயிர்க்குலங்கள் வாடி வதங்கா மல் வாழ்வாங்கு வாழ்கின்றன.

மேற்கண்ட ஓசோன் படலம் குறித்த அறிவியற் சிந்தனை நக்கீரர் பெருமான் பாடித்தந்த திருமுருகாற்றுப் படையில் காணப் பெறுகின்றது.

சோதி இளம்பரிதி நூறாயிரங் கோடி போல வளந்தரு தெய்வீக வடிவாகிய பேரொளிப் பேரெழில் குமரக் கடவுளின் பன்னிரு கைகட்கும் பன்னிரு தொழில்களை நக்கீரர் வகுத்துக் காட்டுகின்றார். செறுகர்த் தேய்க்கும் செல்லுறழ் தடக்கைதான் முருகப்பெருமானின் திருக்கை. ஆனாலும் மண்ணக மாந்தரை வாழ்விக்கவும் அக்கரங்கள் வரையாது வழங்கிக் கொண்டிருக்கின்றன. சூரியனுடைய வெம்மை தாங்காது என்பதற்காக அந்தரசாரிகளாக இயங்கிக் கொண்டிருக்கும் சில முனிவர்கள் ஆதித்த வெப்பத்தை, வாங்கி வடிகட்டிப் பூமிக்கு அனுப்புகின்றனர்.

யாராலும் தாங்க முடியாத வெப்பத்தை அந்தரசாரி களாகிய அந்த முனிவர்கள் மட்டும் எப்படித் தாங்கிக் கொள்கின்றனர்? அவர்களுக்கு அந்த ஆற்றல் எங்கிருந்து வந்தது. பரம கருணையாளனாகிய பேரருள் முருகனுடைய பன்னிரண்டு திருக்கரங்களில் ஒருகரம், விண்ணில் இயங்கும் முனிவர் பெருமக்களுக்கு அளப்பரிய ஆற்றலை வழங்கிக் கொண்டிருக்கின்றது. இதனை திருமுருகாற்றுப் படை.

"விண்செலல் மரபின் ஐயர்க்கு ஏந்தியது ஒருகை" என்று குறிப்பிடுகிறது. ஓசோன் படலம் செய்யும் பணியை அந்தர சஞ்சாரிகளாகிய முனிவர்கள் செய்வதாகக் குறித்த சிந்தனை அதிசயிக்கத் தக்க அறிவியல் சிந்தனை அல்லவா?

திருச்சிற்றம்பலம்

**தி. பொன்னம்பலம்**
M.A., M.Phil., M.Ed.,
சிதம்பரம்.

# பார் போற்றும் பாம்பன் சுவாமிகள்

## பாம்பன் சுவாமிகள் திருவடிகளே சரணம்

செந்தமிழும் சிவநெறியும் தழைக்க வாழையடி வாழையென வந்துதித்த அருளாளர் மரபில் அவதரித்த பெரியார் வையகம் வணங்கி வாழ்த்தும் பாம்பன் சுவாமிகள். முழு முதற் கடவுளான முருகப் பெருமானின் திருவருளைப் பெற்று, அவனருளாலே அவன் தாள் வணங்கி உள்ளத் தால் உணர்ந்து, கண்ணாரக் கண்டு நீக்கமற நிறைந் துள்ள அப்பெருமானின் திருவடி மலர்களை நெஞ்சார நினைந்து. வாயார வாழ்த்தி, மெய்யாரத் தொழுது வணங்கி தூய நல் வாழ்வு பெற்றவர் அவர்.

சாதி, குலம், பிறப்பு, சமயம் என்னும் சுழிபட்டுத் தடு மாறும் ஆதரவற்ற ஆருயிர்களுக்கும், கணாபத்தியம், கௌமாரம். சைவம், சாக்தம், சௌரம், வைணவம், என்னும் அறுவகைச் சமயத்தார்க்கும், "ஒன்றே குலம் ஒருவனே தேவன்" என்னும் இயற்கை உண்மையை எடுத்துரைப்பதே, திருமுருக வழிபாடு.

அறுவகைச் சமயத்தார்க்கும், "அவன் ஒருவனே இறை வன்", என்பதை எடுத்துரைப்பதே அவனது ஆறு திரு முகங்கள்.

அப்பெருமானின் அளவற்ற ஆற்றலையும் அருளை யும் விளக்குவன அவனது ஆறிரண்டு திருக்கரங்கள்.

ஆருயிர்களுக்கு அழியாத பேரின்பத்தை அருள்வதே அப்பெருமானின் அறிவு, இன்பம் என்ற இரண்டு திரு வடிகள்.

ஞான சக்தியாகிய வெற்றிவேல் ஆருயிர்களின் "யான், எனது" என்னும் செருக்கினை அறுக்கும் உணர்வினையும்,

இச்சா சக்தியாகிய வள்ளியம்மை உயிர்கள் இறைவன் திருவடியில் இரண்டறக் கலக்கும் உண்மையையும்,

கிரியா சக்தியாகிய தெய்வயானை அம்மை மன்னுயிர்களின் செயலையும்,

செவ்வேள் ஏறிய மாமயில் உயிர்களின் மயக்க நிலையினையும்,

இனிது எடுத்துரைப்பதே திருமுருகனின் திருவுருவம் காட்டுகின்ற தெய்வீக உண்மைகள் என்று உணரலாம்.

சத்து, சித்து, ஆனந்தம் என்ற உண்மை அறிவு இன்பப் பொருளாய், இச்சை, ஞானம், கிரியை என்ற விழைவு, அறிவு, செயல் என்னும் வடிவாய், படைத்தல், காத்தல, அழித்தல் எனும் முத்தொழிற்கும் முழு முதலாய், அழகும், இளமையும், ஆற்றலும் அமைந்த அருளுருவாய், உள்ளு வார்தம் உள்ளத்தில் ஓமெனும் மறை மொழியாம் மந்திர மாய், அங்கு இங்கு எனாதபடி எங்கும் நிறைந்த பேரொளி யாய், எவ்வுயிர்க்கும் தலைவனாய், எந்நாட்டவர்க்கும் இறைவனாய், தென்னாடு உடைய சிவனாய், தேவ தேவ னாய், திரிபுரம் எரித்த விரிசடைப் பெருமானின் திரு வருளாய் விளங்கும் தெய்வமே குன்றமெறிந்த குமர வேளும், குறத்தி மணாளனுமாகிய குமரக் கடவுள் என் பதும் மாதா பிதா குரு தெய்வம் என்பதும் பண்டைய தமிழர்கள் கண்ட முடிபு.

பாம்பன் குமர குருதாச சுவாமிகள் அவர்கள் குமரக் கடவுளின் அருளைப் பெற்றுய்ய அவதரித்து வழிகாட்டும் ஒளிவிளக்காய், உள்ளுவார் நெஞ்சத்து இருளகற்றும்

இறையொளியாய், தமது பாட்டாலும் உரையாலும் நின்று நிலவுகின்றார்கள். அவர் திருவடியைச் சரணடைந்த அன்பர்களுக்கு இவ்வுலகில் இன்பமே, எந்நாளும் துன்ப மில்லை.

பாம்பன் சுவாமிகளின் திருவருட்பாடல்கள் முருகப்பெருமானின் திருவருளை வாரி வழங்கும் மாமழை. தீவினைகளைச் சுட்டெரிக்கும் செஞ்ஞாயிறு. அல்லல் களைந்து ஆருயிர்களுக்குப் பேரின்ப வாழ்வு அளிக்கும் தண்ணிலவு. மனித குலம் தெய்வத் திருவருளைப் பெற்றுய்ய அருள் சுரந்து ஊட்டும் காவிரி. தீராதவல்வினை நோய்களை எல்லாம் தீர்த்து வைக்கும் மாமருந்து. இம்மை மறுமை இன்பங்களை விழைவார்க்கு வேண்டுவன வேண்டியாங்கு எய்த அருளும் மந்திரம். துன்பம் எனும் கடலைக் கடக்க உதவும் தோணி. பாரில் பசியும் பிணியும் பகையும் நீங்கி மாந்தர் வளமும் வாழ்வும் சிறக்க உதவும் வாழ்த்துரை. எனவே குருவடிவாகி குவலயந்தன்னில் திருவடி வைத்து திறமிது பொருளெனத் தெவிட்டாது உணர்த்திய தேவ மைந்தர் பாம்பன் குமர குருதாச சுவாமிகள் திவருடி மலர்களை நினைந்து நினைந்து உணர்ந்து உணர்ந்து உண்மையான உள்ளன்போடு உருகி வணங்கி வழிபட்டு உய்வோமாக.

முருகன் குமரன் குகன் எனமொழிந்து
உருகும் செயலும் உணர்வும் தந்தருள்
குமார குருவே போற்றி! போற்றி!

புலவர் **சு. திருமாவளவன்**
தமிழாசிரியர்
அரசு மேல் நிலைப்பள்ளி, குமராட்சி.

# பாம்பனடிகளும் பண்முறைப் பாடல்களும்

கலைமாமணி ஆ க முத்துக்குமாரசாமி

அத்தியாச்சிரம சுத்தாத்துவைத வைதிக சைவ சித்தாந்த ஞானபானு ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள் என்னும் பாம்பனடிகள் சமீபகாலத்தில் (1852—1932) அவதரித்த சிறந்த முருகனடியார்; ஆரியத்தொடு செந்தமிழ்ப் பயனையும் நன்குணர்ந்தவர்; இணையிலாச் சந்த அருட்கவி திருப்புகழ்பாடிய அருணகிரிநாதரின் அடிச்சுவடுபற்றித் தொடர்ந்து அவரையே மெய்க்குருவாகக் கொண்டவர்; மன் உறுதியுடன் பிரப்பன்வலசை மயானத்தில் 35 நாட்கள் கடுந்தவமியற்றி முருகனின் உபதேசம் பெற்றவர்; முருகனைக் கனவிலும் நனவிலுந் தரிசித்தவர்; தலங்கள் பல சுற்றித் திரிந்து ஆங்காங்குள்ள அன்பர்களை அருளுரையால் ஈடேற்றியவர்; ஆறாயிரத்தறுநூற்றறுபத்தாறு திருப்பாடல்களை முருகன் ஒருவன் மீதே பாடி அருள்பெற்றுத் திருவான்மியூரில் சமாதியடைந்த சைவசமயத்தினர்.

இவ் அடிகளார் முத்தமிழ் வளர்ச்சியிலும் ஈடுபாடு கொண்டு சைவசமயப் பெரியோர்களுள் பதினெண்மரின் கருத்துக்களில் தம்மனத்தைச் செலுத்தினார்; வேதாந்த சித்தாந்த சமரச நோக்கத்திற் படிந்து நின்றொழுகினார்; கொள்கையில் மாறாக் குறிக்கோளுடையவராயிருந்தார். இவரது பாடலொன்றினால் இதனை நாம் நன்குணரலாம்.

"முத்தமிழ்க் காதலார் சீகாழி மாமுனி
முதுக்குறைவு விஞ்சுமப்பர்
முருகுகிள ராரூரர் திருவாத வூரர்
முடங்குகடி யொன்பதின்மர்

தத்துவத் தெளிவுடைய பட்டினத் தடிகளுயர்
தகைகொண்ட அருணகிரியார்
தாவில்சிவ வாக்கியர் தவம்பெருகு திருமூலர்
தாயுமா னவரென்பவர்
சுத்தமுறு வேதாந்த சித்தாந்த சமரச
சுபாவமா யமுதநெறியாய்ச்
சொற்ற வுயர் வாக்குகளு மென்சம்ம தத்திலுள
துணிபுக் கியைந்த துணிபே
மத்தமுடை யென்னைநீ யத்துணிபின் மாறாது
வைத்தருள வேண்டு மன்றே
வளமொழு கிராமேசர் தளிமேலை வாயிலில்
வளர் குமர குருநாதனே''

— குமரகுருதாசசுவாமிகள் பாடலில்.
திருவிராமேச்சுரம் – பாடல் - 8.

''என்னைத் தள்ளினாலும் என்னை நம்பியுன் தாள் பணிபவரைத் தள்ளிடாது அருள் நல்க வேண்டும்'' என முருகனிடம் வேண்டும் மற்றொரு பாடற் கருத்தும் இவரது தன்னலமற்ற பரந்த நோக்கத்தைக் காட்டுவதாயுள்ளது.

''ஆளு நின்னடி சூழு நர்க்கரு
ளயில மற்றுமெ னக்கிடு
கேளு யர்ந்தெனை நம்பு மன்பு
கிளர்ந்த வர்க்கு மியைந்த சீர்
நாளு நல்குதி நாயெ னைத்தள்ளி
னாலு மென்றனை நம்பிஉன்
தாளு கந்தவ ரைப்ப ராபர
தள்ளி டாதருள் நல்கியாள்''

—குமரவேள் பதிற்றுப்பத்தந்தாதி 62.

நல்ல பலன் தரும் இசையை விரும்பும் இவர் 'அலாபக் கொடும் பாடல்' பாடுவோரையும் அதன் இசையைக் கேட்பவரையும் ஒரு பாடல் மூலம் சாடியிருக்கின்றார்.

"அண்ணல்நின் மனதினுக் கருவருப் பாயுள
அலாபக் கொடும் பாடலை
அமையுமிசை யிற்பாடு பொழுதுதன் றலைதனை
அசைந்துவெண் முறுவல் தெரியக்
கண்ணைமே லேசெருகி யிதழ்வா யிழித்து நிமிர்
காயநடு நனிகுலுக்கிக்
கரமசைத் தத்தம் பிடித்துட் களிக்குங்
கசட்டுப் பெரும் பாவியை
நண்ணியுற வாடிஇசை கேட்பவரு மேபாவ
நாடுவா ரவருடம்பை
நசிக்கவரு சன்னியி னிழுப்பென வலைக்கவது
நசைஇக்க ணுற்றகண்ணைப்
புண்ணென் றுரைத்திடவு மாசங்கை யென்கொலோ
புகழ்தந் தெனக்கருளிய
பொற்புறுவர் நச்சுமொரு சிற்பர வெளிக்குள்வளர்
பூரணா னந்தகுகனே"

—குமரகுருதாச சுவாமிகள் பாடலில்
பூரணானந்த குகன் - பாடல் 5

இவர் இயற்றிய நூல்களுள் "திருவலங்கற்றிரட்டு" ஒரு சிறந்த இசை நூல். இந்நூலின் முதற் கண்டம் இசைத் தமிழ்வளம் பெறுவதற்கான 601 பாடல்களால் ஆனது. தேவாரப் பண்முறைப் பாடல்கள் சிவபெருமான் மீது அமைந்தது போல, முருகன் புகழை விரித்து ஓதும் சிறப்பின் பண்முறைப் பாடல்களாக இவை அமைந் துள்ளன. இரண்டாங் கண்டம் "பல்சந்தப்பரிமளம்"

என்னும் மறுபெயருடையதாய் வெள்ளியியல், ஆசிரிய வியல், கலிப்பியல், வஞ்சியியல் என்னும் நாற்பெரும் பிரிவு களையுடையதாய் ஒவ்வொன்றிலும் அவ்வப் பிரிவினங் களையும் கொண்டு மிளிர்வது இதில் 'நேரிசை வெண்பா'' முதல் "வாயுறை வாழ்த்து மருட்பா" ஈறாகப் பல்வேறு வகைப் பாக்கட்கு எடுத்துக் காட்டுகளாக 532 பாடல்கள் உள்ளன.

முதற்கண்டம் 1892 ஆம் ஆண்டில் இவரின் நாற்பதா வது வயதில் பாடப்பட்டது. முதலில் உள்ள காப்புக்குறள் வெண்பாக்கள் பத்து போக மற்ற யாவும் நல்லிசையுடன் பாடத்தக்க பண்முறைப் பாடல்களேயாகும். இம் முதற் கண்டம் பாடுவதற்குக் காரணமாயிருந்தவர் அடிகளாரின் சீடருள் ஒருவரான திரு L.D. முத்துக்கருப்பபிள்ளையாவர். இவர் குமரகுருதாச சுவாமிகளின் பாடலில் நவரத்தின மீக் கூறு முதலிய குழுப்புடைச் சந்தப் பாட்டுகளைப் பார்த்து விட்டு அவை எளிதாக யாவரும் பாடவும் பொருளறிய இயலாதனவாகவும் இருந்தமை கருதி எளிதில் பாடக் கூடிய திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகியோரின் இசைத் தமிழ்த் தேவாரப் பதிகங்கள் போலப் பண்முறையில் பாடவேண்டுமென்று அடிகளாரைக் கேட்டுக் கொண்டனர். அவர் கருத்தினை அங்கீகரித்து அடிகளார் இக்கண்டத்தைப் பாடினார்.

'திருவலங்கற்றிரட்டு' என்னும் பெயரை அடிகளாரே வினா உத்தரக் கவியாகக் கூறியுள்ளார்.

### நேரிசை வெண்பா

'பிள்ளையின்பே ராவதெது பீட்டின்சொ லென்பழகி
யென்னுமொழி யென்கவரி யேந்திமிக்கார்—முன்னசைத்தே
உய்பவனை யேவுரையா தோஞ்சேய்பண் நூலெனுரை
செய்திருவ லங்கற் றிரட்டு"

பிள்ளையின் பேராவது எது? திரு
பீட்டின் சொல் என்? அலம்
பழகு என்னுமொழி என்? கல்
கவரியேந்தி மிக்கார் உய்பவனை
ஏவுரை யாது? திரட்டு
ஓம்சேய்பண் நூலென் உரைசெய் திருவலங்கற்
றிரட்டு

இசைத்தமிழ் வளம்பெற எழுந்த முருகன் பாடல்கள் நிறைந்த இந்நூலை இவர் "ஓம்சேய்பண் நூல்" என்று மொழிந்துள்ளது காண்க. தேவாரப்பதிகங்களையும் பண்களையும் ஆராய்வது போல ஓம்சேய் பண்ணூலின் இப் பாடல்களையும் பண்களையும் நாம் ஆராய்ந்து பயன் கொள்ளலாம்.

இப்பாடல்களை ஓதற்பயனாவது இதுவென்று பின் வரும் இவரது வெண்பாச் செய்யுள் குறிக்கும்.

"பதக்கண்டா பண்பா வலங்கற் றிரட்டின்
முதற்காண்டம் பாடு முருகோன்—பதக்கண்டாம்
இன்புனது கண்ணுறுமா றேதி லருணோக்கும்
அன்பருநின் முன்லருகு வார்."

— காசியாத்திரை. 200

# பாம்பன் அடிகளாரின் பண்முறைப் பாடல்கள்

20 பண்களில் அமைந்துள்ளன,

| | பண் | இராகம் |
|---|---|---|
| 1: | கொல்லி | நவரோசு |
| 2. | நட்டபாடை | நாட்டக்குறிஞ்சி, நாட்டை |
| 3. | பழம் பஞ்சுரம் | சங்கராபரணம் |
| 4. | நட்டராகம் | பந்துவராளி |
| 5. | இந்தளம் | லலிதபஞ்சமம் |
| 6. | காந்தாரபஞ்சமம் | கேதாரகௌளை |
| 7. | கௌசிகம் | பைரவி |
| 8. | பஞ்சமம் | ஆகிரி |
| 9. | கொல்லிக் கௌவாணம் | நவரோசு |
| 10. | புறநீர்மை | பூபாளம், சீகண்டி |
| 11. | காந்தாரம் | காயகப்பிரியா |
| 12. | தக்கேசி | காம்போதி |
| 13. | சாதாரி | பந்துவராளி |
| 14. | திருத்தாண்டகம் | அரிகாம்போதி, வேகடை |
| 15. | யாழ்மூரி | அடாணா |
| 16. | வியாழக்குறிஞ்சி | சௌராஷ்டிரம் |
| 17. | தக்கராகம் | காம்போதி |
| 18. | பியந்தைக் காந்தாரம் | கரகரப்பிரியா |
| 19. | சீகாமரம் | நாதநாமக்கிரியை |
| 20. | மேகராகக் குறிஞ்சி | நீலாம்புரி |

இப்பாடல்களைப் பாட வேண்டிய முறையைப் பின் வருமாறு அடிகளே வரைந்துள்ளனர்.

"விரதாதி விசேஷ தினங்களிலும் தினந்தோறும் தேவாலயத்தின் முன்னர்ப் பாடுவதாயின், பாடுவோர் ஸ்ரீ அருணகிரிநாத சுவாமிகள் திருவாக்காகிய திருப்புகழ் பாடியபின்னர் இப்பாடல்களுள் க்ஷேத்திரத்திற்குரிய திருப் பதிகத்தை யினிது பாடி யிறுதிக்கணுள்ள திருக்கந்தர் திருப்பல்லாண்டு கூறி முடித்துக் கற்பூர தீபாராதனை செய்து தரிசித்துப் பிரசாத மேற்றுக் கந்தமூர்த்தியைக் கருத்திருத்தி யிருப்பிட மெய்தக் கடவர். தேவாலயமன்றி கிருகம் பொது விட மென்பவைகளு ளொன்றிற் சரவண சாமியைப் பூசிக்கத் துணிநரும். மேற் பிரகாசப்படுத்திய வாறே முன்னர்த் திருப்புகழ் செப்பிப் பின்னர் இத்திருப் பாடற் பொதுத் திருப்பதிகங்களுள் ஒன்று அல்லது பலபாடி இறுதியிற் பல்லாண்டோதித் துதித்துப் பூஜையை முடித்துக் கொள்ளக் கடவர். திருப்புகழ் பாடமில்லாதார் இத்திருப்பாடல்களையே ஆரம்பமாகப் பாடித் துதித்து முடிவு பெறக்கடவர்."

அன்பர்கள் இசைப்பாவாற் பரமனைப் பாடித்துதிக்க வேண்டிய இன்றியமை யாமையையும் அருளாளர் பலரின் மேற்கோளுடன் இவர் வரைந்துள்ளார்.

| | |
|---|---|
| பெரியபுராணம் | "அர்ச்சனை பாட்டே யாகும்" |
| திருவாதவூரர் புராணம் | "அன்பிலாத பண்பின ரெனினும் தன்னைப் பாடினர்க் கிரங்கும்" |
| திருஞானசம்பந்தர் | "பாடுவார்க் கருளு மெந்தை" |
| திருநாவுக்கரசர் - | "தமிழோடிசை பாடன் மறந்தறியேன்" |
| சுந்தரமூர்த்தி | "பொய்ம்மையாளரைப் |

| | |
|---|---|
| | பாடாதே எந்தைபுகலூர் பாடுமின் புலவீர்காள்'' |
| மாணிக்கவாசகர் | ''என்புருகிப் பாடு கின்றிலை'' |
| தாயுமானவர் | ''பாடுகின்ற பனுவ லோர்கள் தேடுகின்ற செல்வமே'' |
| அருணகிரியார் | ''முத்தமிழால் வைதா ரையும் அங்கு வாழ வைப்போன்'' |
| குமரகுருதாச சுவாமிகள் பாடல் | ''பாட்டிலுனைப் பழிச்ச வொரு பாக்கியமும் பெற்றதன்றி'' |
| ஷண்முக சகஸ்ரநாமம் | ''கீதக்ஞன், கத்யபத்யப் பிரியன்'' |

எனவும் வருதலால் அன்புடையார் யாவரும் பரமனைப் பாவாற்றுதிக்கவேண்டுமென்றல் தடையற்ற தீர்வையெனச் சற்சங்கத்தார். யாவரும் அறிவுரன்றோ?

இவரது ''குமரகுருதாச சுவாமிகள் பாடல்'' இறுதியில் ''சமாதானசங்கீதம்'' என்னும் தலைப்பில் அமைந்த '.சஞ் சலமேன்மனமே'' கீர்த்தனை உயர்ந்த சிவதத்துவப் பொருளை உணர்த்துவதாயும் விரித்துப் பாடற்கினிய தாகவும் உள்ளது.

# சமாதான சங்கீதம்

இராகம் முகாரி

தாளம்:- அட

பல்லவி

சஞ்சலமேன் மனமே — சிவனடித்
தஞ்சமான பினுமே - சஞ்சல

அனுபல்லவி

என்செய லாலொன்றும் இல்லையென் றேநின்றால்
ஏதந்துயரிலையே - இந்தச் சூதையறிகிலையே சஞ்சல

சரணம்

1. வானமிடிந்து தலையில் விழும்படி
வம்புவந்தாலுமென்னை? அந்தக்
கானமயில் முருகையன் திருவருள்
கைவிட மாட்டாதே சஞ்சல

2. பன்னிரு சூரியர் ஒன்றா யெரிக்குங்கற்
பாந்தம்வந் தாலுமென்னை? — அந்தப்
பன்னிரு கட்சிவன் றண்ணளி நம்மைப்
பராமரித் துக்கொள்ளுமே சஞ்சல

3. செப்பவொண் ணாப்பிழை யெத்தனை
யோமுன்னர்ச்
செய்திருந் தாலுமென்னை — நம்மை
எப்பொழுதும்புரந் தாள்குகப் பிரமத்
திலகருண் முன்னிறுமே சஞ்சல

4. நாலேழு நாலுந் தெளிவாக ஓதிமெய்ஞ்
ஞானஞ்சொன்னாலும் என்னை — அந்த
மூலப் பிரணவ சாமி தயாவின்றி
முன்னேறுவ தில்லையே சஞ்சல

5. காஷாயம் வற்கலை பூண்டுசன் னாசியாய்க்
காடுறைந் தாலுமென்னை—அந்தக்
காலுந் தலையுங் கடந்த நிலைதன்னைக்
கண்டபின் பன்றோகிட்டும் சஞ்சல

6. பொன்னாசை பெண்ணாசை மண்ணாசை
மூன்றையும்
போக்கடித் தாலுமென்னை—கேளுன்
தன்னாணை ஞானமொன் றேதன்னைக் காட்டும்
தலைவனிடம் கூட்டும் சஞ்சல

7. ஒன்பது பத்தாறு தத்துவ மெல்லாம்
ஒடுக்கி யிருத்தலினுங்—குகன்
அன்பருள் கொண்டுசின் முத்திரை தன்னில்
ஆனந்தங் கைவல்யமே சஞ்சல

8. முத்தி தருங்குகப் பிரமத்தை வாழ்த்திய
முத்தனண் ணாமலையான்—இரு
பதம வடிக்கன்பு பண்ணிடு தாசர்
பரகதி யெய்துவரே சஞ்சல

"தங்க ஆனந்தக் களிப்பு" என்னும் தலைப்பில் "சுய மான தங்கம்" எனத் தொடங்கும் இவர் இயற்றிய இனிய இசைப்பாடல் இசைக்கலைஞர்கட்கு ஒரு நல் விருந்தாகும். இது உலக வாழ்வாயுள்ள பொன்னுக்கும் பரம வாழ் வாயுள்ள சுப்பிரமணியப் பிரமத்துக்கும் பெருளாமாறு பாடப்பட்ட இரட்டுற மொழிதலாகும்.

# தங்க ஆனந்தக் களிப்பு

சுயமான தங்கமித் தங்கம்—சிவ
சுப்பிரமணியமெனுந் தெய்வத் தங்கம் (சுயமான)

1. அந்தரர் வேண்டொரு தங்கம்—ஈறி
லறுசிக ரக்கிரி நின்றெழு தங்கம்
சுந்தர மாய்ச்சுடர் தங்கம்—உமை
துங்க மலர்க்கரந் தங்கொரு தங்கம் (சுயமான)

2. வேதத்தி லேயுள்ள தங்கம்—சுத்த
வித்தைசொல் ஆகமநித்தியத் தங்கம்
நாதத்தின் மேலுள்ள தங்கம்—அந்த
நாதங் கடந்தபின்னாமடை தங்கமி (சுயமான)

3. பார்ப்பவர்க் கின்பு செய் தங்கம்—சிவ
பாக்கிய மெல்லாம் பகுக்கின்ற தங்கம்
சீர்ப்பர தத்துவத் தங்கம்—நிறை
சிற்பர தோஜா மயானந்தத் தங்கம் (சுயமான)

4. நினைப்பவர்க் கின்பு செய் தங்கம்—தொண்டர்
நெஞ்செனும் பேழையிலேநிறை தங்கம்
வினைப்பவம் வெல்பசுந் தங்கம்–ஞான
விளைவற்ற பூமியிற்புதைபட்ட தங்கம் (சுயமான)

5. வாதிகட் கெட்டாத தங்கம்—அன்பு
வறண்டலை வோ ரறியாவருந் தங்கம்
தீதிகற் சூள்களை தங்கம்--தவச்
செல்வர்க்குச் செல்வமதாந்திருத் தங்கம் (சுயமான)

6. அஞ்சனத் தெட்டாத தங்கம்—பத்தி
அஞ்சனத் தேயெட்டு மற்புதத் தங்கம்

செஞ்சயத்தைத்தரு தங்கம்—சிவ
சித்தர்கள் யோகிகள் மெச்சிடு தங்கம் (சுயமான)

7. மாற்றி லுயர்ந்தொளிர் தங்கம்—எல்லா
மங்கும் படிக்கருள் செய்தனித் தங்கம்
ஆற்றலின் மேம்படு தங்கம்—பகி
ரண்டமெல் லாம்விலை
கொண்டுயர் தங்கம் (சுயமான)

8. அளவைக் கடங்காத தங்கம்—தினம்
அனலிட்டுருக்கினும் உருகாத தங்கம்
களவுக் கிணங்காத தங்கம்—தன்னைக்
காமுறு வார்மிடி தீர்க்கின்ற தங்கம் (சுயமான)

9. யாதனை யைத்தெறு தங்கம்—தெய்வ
யானை விழிக்கித மாயவிர் தங்கம்
எதனை யாநறுந் தங்கம்—எழில்
ஏனலி னோர்கொடி தான்படர் தங்கம் (சுயமான)

10. ஞானவின் னாகின்ற தங்கம்—நலம்
தலகுந் திருப்புக ழோன்கண்ட தங்கம்
வானவர் மாமுடித் தங்கம்—நம்மை
வாழ்விக்க வந்த பராபரத் தங்கம்(சுயமான)

"சண்முக கவசம்" என்னும் நூலும்" பஞ்சாமிர்த வண்ணம்" என்னும் பல்சந்தங்கள் பொருந்திய இசைப் பாடலும் அன்பர்களிடையே பெருவழக்கினவாக உள்ளன

தேவார மூவர்கள் சிவபெருமான் மீது அளவிலாப் பக்தியுடன் பாடியவை இசைத்தமிழ் வளர்ச்சிக்கான பண் முறைப் பாடல்கள் அவைகளைப் போலவே முருகப்

பெருமான் மீது பாம்பனடிகள் முறையாகப் பண்ணிசையிற் பாடல்கள் இயற்றியுள்ளனர். வேறு வகை இசைப் பாடல் களும் பாடியுள்ளனர். பாடல்கள் அனைத்தும் நிறைந்த தத்துவப் பொருளை உணர்த்தவல்லனவும் இலக்கணப் பிழைகளற்றவையும் சொல்லினிமை பொருளினிமை கூடி யனவும் ஆகும் இப் பாடல்களும் தமிழிசை வரிசையிற் பொருந்தும் இசைப்பாடல்களே யாகும். தேவாரப் பாடல் களைப் போலவே அந்த அந்த இராகங்களில் இவற்றையும் பாடலாம். சுத்தாங்கமாகவும் கூறலாம். பண்ணாங்கமாக வும் பாடலாம். முருகன் அடியார்களும் தமிழிசைக் கலைஞர்களும் இப்பாடல்களைப் பயின்றும் பாடியும் பயன் பெறுவாராக.

ஓம் குமர குருதாச குருப்யோ நம:



ஓம் குமரகுருவே சரணமய்யா

அருள்மிகு பாம்பன் சுவாமிகள் மடாலயத்தில் அறுபடைவீடு அமைவதற்கு உபயம் செய்த அன்பர்கள் விவரம் :

## திருச்செந்தூர்

திரு C. சின்ன அண்ணாமலை,
திருமதி C. சசிகலாவதி

## பழமுதிர்சோலை

திரு S. V. ரமணன்,
திருமதி R. ஜானகி

## திருப்பரங்குன்றம்

திரு C. K. அரங்கநாதன்,
திருமதி R. சுசீலா

## சுவாமிமலை-

திரு V. S. இராமலிங்கம்
திருமதி R. பத்மாவதி

## திருத்தணி

திரு S.R. இராமநாதன்
திருமதி R. இராஜேஸ்வரி

## மயூரநாதர்

ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள் ஆலய வளர்ச்சிக் குழுவினர்

## துவாரபாலகர்

திரு P. பாலகிருஷ்ணன் சுசிலா, மலேஷியா
நடராஜர் கோவில், ஈப்போ,

## வண்ணம் உபயம்

திரு A.K. சிதம்பரம் செட்டியார்

குட முழுக்கு விழாக் குழுவினர்

| | |
|---|---|
| முதல்வர் | திரு Dr. N. பசுபதி |
| தலைவர் | திரு R. வேணுகோபாலன் |
| பொருளர் | திரு C. சின்ன அண்ணாமலை |
| செயலர் | திரு T. கிள்ளிவளவன் |
| உபசெயலர் | திரு S.V. ரமணன் |
| | திரு P. தங்கையன் |

உ

முருகன் துணை



# போற்றி விண்ணப்பம்

ஐயனே யரசே போற்றி
யருமறைப் பொருளே போற்றி
துய்யனே துணையே போற்றி
தூமணித் திரளே போற்றி
மெய்யருள் விளைவே போற்றி
வெற்றிவே லேந்து பூவற்
கையனே போற்றி யெங்கள்
கடவுளே போற்றி போற்றி

ஸ்ரீ ராமகிருஷ்ணா, 5.தெற்கு சன்னதி, சிதம்பரம்

குடமுழுக்கு விழாமலர்
நன்முறையில் வெளிவர
ஒத்துழைப்பு நல்கிய
அனைவருக்கும்

**நன்றி!**



கலைமாமணி

வரகூர் ஆ.க. முத்துக்குமாசாமி

L.C.R. நடராஜன், சிதம்பரம்